# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை



சிலம்பு-௫௫] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௨, பங்குனி, Apr. '81 [பரல் -௮

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், எம்.ஏ., பி.எச்.டி.
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

உ. முனைவர் தமிழண்ணல், பேராசிரியர்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

ங. பேராசிரியர் ச அகத்தியலிங்கம், தமிழ்த்துறைத் தலைவர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம். அண்ணாமலை நகர்.

ச. முனைவர் பொன் சௌரிராசன், தமிழ்த்துறைத் தலைவர்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

ரு. முனைவர் பொன் கோதண்டராமன், உதவிப் பேராசிரியர்;
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்

சா. பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி. எம். ஏ.
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

எ. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
முனைவர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ.,டிப் லிங்., பி.எச்.டி.,
மாயூரம்.

அ. புலவர் இரா. இளங்குமரன், தலைமைத் தமிழாசிரியர்,
மு. மு. உயர்நிலைப்பள்ளி, திருநகர், மதுரை-6.

கூ பேராசிரியர் வீ. ப. கா. சுந்தரம், இறையியல் கல்லூரி,
அரசடி. மதுரை.

சிறப்பாசிரியர்: தாமரைச்செல்வர் வ. சுப்பையா.

---



சித்தாந்த கலாநிதி உரைவேந்தர்,

ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை

தோற்றம் : 5—9—1902 மறைவு: 3—4—1981

# செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு ருரு | திருவள்ளுவர் ஆண்டு உ0கஉ, பங்குனி ஏப்ரல் 1981 | பரல் அ |
|---|---|---|

## பேராசிரியர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்களின் பெரும் பிரிவு

பெரும் பேராசிரியர் உரைவேந்தர் சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் 3-4-'81 ஆம் நாள் இயற்கை எய்தினர்கள் என்னும் செய்தி ஆற்றெணுத் துயரை ஊட்டுகின்றது. கழக நூலாசிரியர்களுள் சிறந்த ஒருவரை இழந்தோம் என்னும் ஏக்கம் பெரிதும் வருத்துகின்றது!

'நில்லா உலகம் புல்லிய நெறித்தே' என்னும் மெய்யுரையைத் தெள்ளிதின் உணர்ந்தார்க்கும், மேதக்கோர் பெரும் பிரிவு உள்ளத்தை வாட்டாது ஒழிவது இல்லை!

ஔவை அவர்களின் திருப்பிறப்பால் தமிழுலகும், சைவ உலகும் தளிர்த்துத் தழைத்துப் பொலிவுற்றதை எவரே அறியார்! கழக நூல்களின் அருமையில் தோய்ந்து தோய்ந்து அவர்போல மரபுநிலை திரியாமல் உரைகாண வல்லரர் அரியர் என்பதை அறிஞர்களுள் எவரே அறியார்! தமக்கென இயல்பாக அமைந்த மூளைக் கூர்ப்பாலும் வரலாற்றுத் திறத்தாலும் கல்வெட்டு ஆய்வாலும் பண்டைப் புலவர்களின் பெயர்கள், ஊர்கள், வரலாறுகள், வழக்காறுகள் இன்னபலவற்றைச் செவ்விதின் நிலைபெறுத்திப் பொலிவுறுத்தியதைப் பாராட்டாத பெருமக்கள் எவர்! இவற்றை நினைக்குங்கால் உருக்கம் உண்டாதல் இயற்கையேயாம்! இத்தகைய பெருமகனுரை இழந்தோம் அல்லமோ!

புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, நற்றிணை என்பவற்றுக்கு அவர்கள் அருமையின் எழுதிய உரை விளக்கங்கள்

அழியாப் புகழ் வாழ்வினவாம். திருவருட்பாவுக்கு முற்றுக உரை கண்ட பெருமகனார் அவரே என்பது பெருமை கொள்ளத்தக்க செய்தியாம்.

உரைவேந்தரவர்கள் உரைநடையாக்கத்திலும் கைவந்த திறவோராய்த் திகழ்ந்தமை, சிலப்பதிகாரம், சிந்தாமணி, மணி மேகலை இன்னபல நூல்களின் சுருக்கமும் ஆராய்வுமாக எழுதிய நூல்களால் விளங்கும். அவர்களின் வரலாற்றுத் திறத்திற்குச் சேரமன்னர் வரலாறு சீரிய சான்றாகும். அவர்களின் நாவன்மை நாடறிந்த செய்தியாகும்!

உரைவேந்தர் அவர்களுக்கும் கழக ஆட்சியாளர் அவர்களுக் கும் இருந்த தொடர்பு பெரிது. அத் தொடர்பையும், அவர்கள் கழகத்திற்கு ஆக்கித்தந்த நூல்களையும் பற்றிய குறிப்புகளை, முன்னரே செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 47, பரல் 8 இல் கழக ஆட்சியாளர் அவர்களால் எழுதப்பெற்ற 'திருக்குறள் பணியே கழகத்தின் தனிப்பெரும் பணி' என்னும் கட்டுரையில் காணலாம்.

பேராசிரியர் அவர்கள் சீரிய வாழ்வின் செழும்பயனாக நன்மக் களைப் பெற்றவர்கள். அவர்களின் புலமைச் சிறப்பை வழிவழிச் சிறப்பாக்க வல்ல திறவோர்கள். அவர்களுக்கு ஏற்பட்டுள்ள இப் பேரிழப்பில் கழகம் பங்குகொண்டு தன் ஆற்றாமையைத் தெரி வித்துக்கொள்கிறது. வாழ்வாங்குவாழ்ந்த பெருமகனார் ஆருயிர் அம்மை அம்பலவாணர் திருவடி நீழலில் தளிர்ப்புற வேண்டிக் கொள்கிறது.

---

## யார் உளர்!

அவ்வை துரைசாமி! அந்தோயான் எங்குறவே
இவ்வுலகை விட்டகன்றீர் என்செய்வேன்—செவ்வையுறச்
செந்தமிழ்க் காருரை செய்துரைப்பார் உண்டெனினும்
நுந்தமைப்போல் வார்யார் உளர்.

—மயிலம், ஆ. சிவலிங்கனார்

## அழகரடிகளார் மறைவுக்கு இரங்கல்

உள்ளம் மகிழ வுயர்சங்கச் செய்யுணலம்
தெள்ளி யுரைத்த திருவாளர்—வள்ளுவனார்
செந்நெறியின் நேர்நின்று சிவனா ரடிசேர்ந்தார்
மெய்ந்நெறிக்கு நல்ல விளக்கு

பேராசிரியர், க. வெள்ளைவாரணனார்.

# உரை வேந்தரின் வரலாற்றுச் சுருக்கம்

இருபதாம் நூற்றுண்டின் இணையற்ற தமிழ்ப் பெரும்புலவர் களுள் முன் வரிசையில் வைத் தெண்ணத்தக்கவர் உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்களாவர். இப் புலவர் பெரு மகனார் தென்னார்க்காடு மாவட்டத்தில் திண்டிவனத்துக்கு அண்மையிலுள்ள 'ஔவையார் குப்பம்' என்னும் ஊரில், கருணீகர் மரபில், சுந்தரம் பிள்ளை என்பாருக்கும், சந்திரமதி அம்மை யாருக்கும், நன்மகனாராக 5-9-1902 இல் தோன்றினார். இவருடன் பிறந்தோர் நால்வர். மூவர் ஆண்மக்கள்; பெண்மகள் ஒருவர். இவர் ஐந்தாம் மகனாராவார்.

இவர் திண்டிவனம் ஆர்க்காடு அமெரிக்கன் நற்பணி உயர் நிலைப் பள்ளியில், பள்ளி இறுதிவரைபயின்று சிறப்புறத் தேறினார். இளமையிலேயே தமிழார்வம் மீதூரப் பெற்றவராய்த் திகழ்ந்தார். எனினும் குடும்ப வருவாய்க்கு வழிதேடும் முகத்தான் நலத்துறைக் கண்காணிப்பாளர் (Sanitary Inspector) பணியில் ஈடுபட்டார். ஆயினும் அப் பணியினைத் தொடர்ந்து ஆற்றும் நோக்கம் அவர்க் கில்லை. காரணம், தமிழார்வம் அவரைத் தமிழ்த்துறைக்கே ஈர்த்தது. ஆறு திங்களின்பின், அப் பணியினின்று விலகினார்.

கரந்தையில் நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார்பாலும், கரந்தைக் கவியரசு இரா. வேங்கடாசலம் பிள்ளை அவர்கள்பாலும் நம் பிள்ளையவர்கள் தமிழ் பயிலத்தொடங்கித் தமிழ் இலக்கியங் களையும் தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும் ஐயந்திரி பறப் பயின்று, பின்னர் சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் பட்டமும் பெற்றார்.

தமிழ்க் கல்வித்தகுதி பெற்ற பின்னர், வடார்க்காடு மாவட்டக் கழக ஆட்சியிலிருந்த காவேரிப்பாக்கம், செங்கம், செய்யாறு, போளூர் ஆகிய ஊர்களிலுள்ள உயர்நிலைப்பள்ளிகளில் தமிழாசிரிய ராகப் பணியாற்றினார்.

திரு. பிள்ளை அவர்களின் புலமைத் திறத்தினைக் கண்ட அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அவரை ஆய்வுத்துறைப் புலவராக அமர்த்திற்று. அங்கே நம் புலவரவர்கள் எழுதிய 'சைவ சமய இலக்கிய வரலாறு' பல்கலைக் கழக வெளியீடாக வந்தது. பின்னர் நற்றிணையினை ஆராய்ந்து தெளிவான புத்துரை ஒன்றினை வெளியிட்டார். சைவசமய இலக்கியத் துறையில் மிகக்

கடினமான 'ஞானமிர்தம்' என்னும் நூலினை நன்கு ஆராய்ந்து பழைய உரைக்கு விளக்கக் குறிப்பு எழுதி வெளியிட்டார். இவர்தம் இவ்வரிய தொண்டினைப் பாராட்டித் தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையினர் இவருக்குச் 'சித்தாந்த கலாநிதி' என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்தனர்.

இவர்தம் தமிழ்ப் புலமையினையும் உரையெழுதும் ஆற்றலையும் அறிந்த சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் அவர்கள், இவர்களைக்கொண்டு புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய நூல்களுக்குப் பதவுரை, விளக்கவுரை முதலியன சிறப்பாக எழுதச் செய்தனர். ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான மணிமேகலைக்கு இவர் எழுதியுள்ள உரை பெரிதும் போற்றத்தக்கதாகும். இவ்வுரைகளின் அருமை பெருமைகளை வியந்து பாராட்டி மதுரைத் திருவள்ளுவர் கழகம் இவருக்கு "உரைவேந்தர்" என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்தது.

நம் புலவரவர்கள், திருப்பதி திருவேங்கடவன் கீழ்த்திசைக் கலைக் கல்லூரி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், மதுரை தியாகராயர் கலைக் கல்லூரி ஆகிய கல்வி நிலையங்களில் தமிழ்ப்பணியாற்றி, அத் துறையில் அறிஞர் பலர் தோன்றக் காரணராயிருந்தார். இவர் 1968 ஆம் ஆண்டில் தம் பணிகளினின்று ஓய்வு பெற்றார். எனினும் இவர்தம் ஆற்றலைப் பயன்படுத்தக் கருதிய இந்தியப் பல்கலைக் கழகங்களின் மானியக்குழு இவரை மீண்டும் ஆராய்ச்சிப் பேராசிரியப் பணியில் ஈடுபடுத்திற்று.

இப் பேராசிரியர் அவர்கள் கழகத்திடமும், கழக ஆட்சியாளர் தாமரைச்செல்வர் அவர்களிடமும் நன்மதிப்பும் பற்றும் உடையவர். கழகம் நடத்திய புறநானூற்று மாநாட்டில் பங்குகொண்டு இவர்கள் ஆற்றிய உரை போற்றுதற்குரியது. அவ்வப்போது கழகம் நடத்தும் விழாக்களுக்குத் தம்முடைய நல்வாழ்த்துக்களை நல்கியும், விழா மலர்கட்குக் கட்டுரைகள் வழங்கியும் பேராதரவு தந்துள்ளனர்.

நம் புலவரவர்கள் எழுத்தாற்றலோடு பேச்சாற்றலும் கைவரப் பெற்றவர். இவர் வானொலியிலும், மாநாடுகளிலும், பேரவைகளிலும் ஆற்றிய உரைகள் அளவற்றவை. அவை நூல் வடிவிலும் வெளிவந்துள்ளன. இவர் நம் செந்தமிழ்ச் செல்வியின் ஆசிரியர் குழுவில் நீண்டகாலமிருந்து அருந்தமிழ்ப் பணியாற்றியுள்ளார்.

1981, சனவரித் திங்களில் மதுரையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் நம் உரைவேந்தர் அவர்கட்குத் தலைமை

அமைச்சர் இந்திராகாந்தி அவர்கள் பத்தாயிரம் வெண்பொற் காசுகளை விருதாக வழங்கிப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தமை ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

இப் பெருந்தகையாரின் நன்மக்களாய்த் தோன்றியவர் ஐவர். இவர்களுள் இந்நாளில் சொல்லேருழவராகத் திகழும் முனைவர் ஔவை து. நடராசன் அவர்களை அறியாதார் இரார். இவர் 'தந்தையை ஒப்பர் மக்கள்' என்னும் மூதுரைக்கு இலக்கியமாகவும் விளங்குகிறார். மற்றும் திருநாவுக்கரசு, ஞானசம்பந்தன் எம். ஏ., மெய்கண்டான், நெடுமாறன் ஆகியோர் உரைவேந்தரின் நன் மக்களாவர். மேலும், பாலகுசம் அம்மையார், மணிமேகலையார், திலகவதியார், தமிழரசியம்மையார் ஆகியோர் அவர்தம் பெண் மக்களாவர். இந் நால்வரும் கல்விச் சிறப்பும் பணிச் சிறப்பும் பெற்றுள்ள நல்லறிஞர்களை வாழ்க்கைத் துணைவர்களாகப் பெற்று நலமுடன் வாழ்கின்றனர்.

பண்பு நலன்கள் :

நம் பிள்ளையவர்கள் நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும், தமிழின மேன்மையில் நாட்டமும் மிக்குள்ளவர். பெரியார் அவர் களிடமும், பேரறிஞர் அண்ணா அவர்களிடமும் இவர்கள் அன்பும் நன்மதிப்பும் வைத்திருந்தார். தன்மதிப்பியக்கக் கருத்துக்களைப் பரப்புவதில் தமிழ்ப் புலவருலகில் இவர்கள் முனைந்திருந்தமையும் நாடறிந்ததே. மறைமலையடிகளாரிடத்தில் இவருக்குப் பற்று மிகுதி: தமிழ் அரியணை ஏறுவதில் அளவற்ற மகிழ்ச்சி கொண்டவர் இவர். "மக்களுக்குத் தெரியாத மொழியிலே ஓர் ஆட்சி நடை பெறுமானால் அது மக்களாட்சியாக இல்லாமல் வெறும் மாக்க ளாட்சியாகத்தான் இருக்கும்" என்று இவர் கூறுமுகத்தான் இவர்தம் தாய்மொழிப்பற்றினையும், உணர்வினையும் நன்கறியலாம்.

ஆட்சியாளர்பற்றி உரைவேந்தர் கருத்து

நம் பிள்ளை அவர்கள், கழக ஆட்சியாளர் அவர்களைப்பற்றி, பவள விழா மலரில் விடுத்துள்ள கருத்தினை ஈண்டு எடுத்துக் காட்டுதல் சாலப் பொருத்தமாகும் எனக் கருதுகிறோம் :

"உயர்திரு. திருவரங்கம்பிள்ளை அவர்களின் அருமைத் தம்பி யும், உழைப்பின் உருவமும், தமிழ் அன்னைக்கென்று சமைந்த தனிப் பெருந் தொண்டரும் அவர்க்குப் பின் கழகத்தின் வளர்ச்சியில் பெருங் கருத்தருமாய் விளங்குபவர் தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள். கழகம் வளரத் தாம் வளர்ந்து, தாம் உயரக்

கழகம் வளர்த்துத் தனிமாண்பு பெற்றவர். உயிர் வேறு உணர்வு வேறெனப் பிரித்தறிய இயலாதவாறுபோலத் திரு. வ. சு. வேறு கழகம் வேறு எனப் பிரித்துக்காண வியலாதவாறு பிரிப்பறப் பின்னிப் பிணைந்து நிற்கும் பெருமகனாராவர்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

இங்ஙனம், பல்லாற்றானும், அன்பு, அறிவு, ஆற்றல்களில் சிறந்த இப் பேராசிரியர் சின்னாட்கள் உடல்நலங் குன்றியிருந்து கடந்த 8-4-81 இல் தம் 79ஆம் அகவையில் இறையடி எய்தினர்.

தனிக் குறிப்பு

செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 55-7 ஆம் இதழில இவ்வாண்டு தொடக்கமுதல் அடுத்தடுத்த திங்களில் காலமான புகழ் பெற்ற கழக நூலாசிரியர் மூவரைப் பற்றிய குறிப்பினைக் கண்டோம்.

அடுத்து வரும் ஏப்பிரல் திங்கள் அமைதியும் இன்பமும் தருமென்று கருதினோம். ஆனால் அது தொடக்கத்திலேயே கழகத்தின் பெரும் புலவராக மதிக்கப்பெற்ற ஒருவரை இழக்க நேர்ந்தது. எனினும் புலவர் நால்வரும் 75 அகவை கடந்தவர்களாக உள்ளனர் என்பது ஒருவகை ஆறுதலும் தேறுதலும் தருகிறது. பெரும்புலவர் நால்வரும் தாங்கள் செய்யவேண்டிய நூலாக்கப் பணியைச் சிறக்கச் செய்துள்ளனர். அவர்கள் செய்த தொண்டினை இக்கால இளம் புலவர்கள் பின்பற்றவேண்டும் என்பதே கழகத்தின் அன்போடு கூடிய வேண்டுதலாகும்.

உரைவேந்தர் அவர்களுக்கும் கழகத்துக்கும் ஏற்பட்ட தொடர்பும், அவர்கள் கழகத்துக்கு ஆக்கித் தந்த நூல்களும் பற்றிய குறிப்பு செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 47 பரல் 8 இல் கழக ஆட்சியாளரால் எழுதப்பெற்ற "திருக்குறள் பணியே கழகத்தின் தனிப்பெரும் பணி" என்ற தலைப்புள்ள கட்டுரையில் விளக்கப் பெற்றுள்ளது.

4—1—81இல் வெளிவந்த ஆனந்தவிகடன் தமிழ்ச் சிறப்பிதழ் மலரில் ஔவை சு. அவர்கள் படத்துடன் சில குறிப்புக்கள் வெளியிடப்பெற்றுள்ளன. அதே இதழில் கழகம் தொகுத்து வைத்திருக்கும் திருக்குறள் தொடர்புடைய நூற்றொரு புலவர் படத் தொகுப்பும் 'உரைவேந்தர் ஔவை' என்ற வரலாற்றுக் குறிப்பொன்றும், "இன்பத் தமிழ்'' என்ற தலைப்பில் திருச்சி கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களைப் பற்றிய குறிப்பொன்றும் உள்ளன. படத்தொகுப்பு 5 ஆம் பக்கம்-இறுதியில் எதிரெதிராக

கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் படமும், உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் படமும் அமையப்பெற்று வியப்பூட்டுகின்றது. பேராசிரியர் அவர்கள் பிரிவின்போது நிகழ்ச்சி ஒன்றை இங்கே குறிப்பிடுவது பொருத்தமாகும்.

கழக ஆட்சியாளர் அவர்கள் நெல்லையில் நடைபெற்ற கழகப் பங்காளிகள் கூட்டத்தில் கலந்துகொண்டு சென்னைக்குத் திரும்பும் வழியில் மதுரையில் 23-2-81 இல் தங்கும்படி நேர்ந்தது. அன்று இரவு சென்னைக்குப் புறப்படும் முன் காந்தி நகரில் வாழும் ஔவை சு. அவர்கள் வீட்டுக்குப் போக நினைத்தபடி எதிர்பார்த்த தம் பேரர் டாக்டருடைய இயங்கி உரிய காலத்தில் கிடைக்கப்பெருமற் போயிற்று. எனவே அவர்கள் சென்னைக்கு வந்தபின் 13-3-1981ல் பேராசிரியர் அவர்கட்கு நலம் உசாவிக் கடிதம் எழுதினர். அதற்கு மறுமொழி வராமற்போகவே, மதுரைக் கழகக் கிளை மேலாளர்க்குக் கடிதம் எழுதி உரைவேந்தர் அவர்களைப் போய்ப் பார்த்து நலங் கேட்டுத் தெரிவிக்கும்படி குறிப்பிட்டிருந்தனர்.

ஆனால் மார்ச்சுத் திங்கள் இறுதிவரை கழகத்தின் வேலை நெருக்கடியினால் கிளை மேலாளர் போகவில்லை. மீண்டும் ஆட்சியாளர் எழுதவே 3-4-81 காலை 8-00 மணி அளவில் ஔவை சு. அவர்கள் இல்லத்துக்குச் சென்றிருந்தனர். அவர்சென்ற சிறிது நேரத்தில் உரைவேந்தரின் உயிர் பிரிந்தமையை நேரிற்கண்டு வருந்தி உடனே சென்னைக்குத் தொலைபேசியில் தெரிவித்தனர். அதனைக்கேட்ட ஆட்சியாளர் இவ் வாண்டு கழகத்துக்கு மிகவும் பொல்லாத ஆண்டு போலும் எனச் சொல்லிப் புலம்பியதோடு கழகப் பெரும் புலவர் நால்வரும் இவ் வாண்டு சனவரி முதல் அடுத்தடுத்த திங்களில் இம் மண்ணுலகில் புகழை நிறுத்தி விண்ணுலகடைந்தனர் என்பது திருவருட் குறிப்புப் போலும் என்று மன அமைதியுற்றனர்.

"நால்வர் புகழை நாளும் ஓதி
ஆறுவோம் மனம் தேறுவோம்."

———

## உனை ஒப்பவர் காண்பமோ!

நச்சினர்க் கினியர்போல் நல்லுரை காண்பவர்
அச்சமில் கொள்கையும் ஆண்மையும் மிக்கவர்
எச்சமில் இலக்கணம் முழுதும் கற்றவர்
உச்சிமேற் கொளுமுனை ஒப்பவர் காண்பமோ!

—நாஞ்சில் கா. கணபதி.

## வெதும்பும் நெஞ்சம்

[செஞ்சொற்கொண்டல், முனைவர் சோ. சிங்காரவேலன், எம்.ஏ., பிஎச்.டி]

ஆழ்ந்த புலமைத் திருவாள !
  அயரா உழைப்பின் அறிவாள !
வீழ்ந்த போதில், உளமெல்லாம்
  வீழ்ந்த தந்தோ ! உரைவேந்தே !
வாழ்ந்த போதில் தமிழன்னை
  வாழ்விற்காக வாழ்ந்தனையே !
போழ்ந்த தையா, உளமிங்கு !
  புலவர் ஏறே ! வாழிபுகழ் ! (1)

பதிற்றுப் பத்தின் உரைபோலப்
  பாரில் வேறு கண்டதில்லை !
முதிர்ந்த அறிவின் நலமெல்லாம்
  முகிழ்ப்பத் தந்தாய் நற்றிணையே !
பொதிந்த ஞான மிர்தவுரைப்
  புலத்துக் கிணையிங் கில்லையயா ;
அதிர்ந்த தந்தோ நெஞ்சம் ! இனி
  அண்ணல் நினை,யாம் காண்பதெவண் ? (2)

திட்பநுட்பம் செறிந்த வுரை,
  தேரும் புலமை, மதிவன்மை,
திட்டமிட்டுச் செயலாற்றும்
  திறமை, பழைய நூல்களெல்லாம்
வட்டமிட்டுப் பொழிகின்ற
  வன்மை சான்ற திருவுள்ளம்
விட்டுப் போன வென்றறிய
  வெதும்பும் நெஞ்சம் என்றென்றும் ! (3)

நல்லறி வாளன் நடராசன்
  நாடுக ளறிந்த புகழாளன்
தொல்லோர் உரைக்கும் நெறிவாழத்
  தூயவ னே நீ, ஈந்தகொடை !
வல்லான் அவ்வை துரைசாமி
  வள்ளால் ! நின்புகழ் வாழியவே !
எல்லாம் வல்ல இறைவனடி
  ஏத்தி நிற்போம், வாழிநின்சீர் ! (4)

## அவன்புகழ் என்றும் வாழ்க!

[தே. முருகசாமி, முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி.]

அவ்வையார் குப்பம் வந்த
  அண்ணலாம் அவ்வை சு.தான்
செவ்வையாய்த் தமிழை ஆய்ந்த
  சித்தாந்தம் தெளிந்த மேலோன்;
கொவ்வைவாய் அழகைப் போலக்
  கொண்டாடும் உரை நூல் தந்தோன்;
அவ்வையும் தமிழும் போல
  அவன்புகழ் என்றும் வாழ்க !



# மொழிஞாயிறு பாவாணரும்-
# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
# அகரமுதலியும்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

(முன் இதழ் ௬0எஆம் பக்கத் தொடர்ச்சி)

29—1—'81 இல் மாநகர்ப் பெருமக்கள் சார்பில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் மொழிஞாயிறு பாவாணர் இரங்கற் கூட்டம் நடந்தது. அதில் கலந்து கொண்ட தமிழக முதல்வர், "தமிழ்மொழி ஆராய்ச்சியில் பாவாணரின் விளக்கம் நம்மைத் தலை நிமிர்ந்து நிற்க வைக்கின்றது. அவருடைய கருத்துக்கள் தமிழின் முதிர்ச்சியை வெளிப்படுத்தியுள்ளன. பாவாணர் ஒவ்வொரு தமிழ்ச் சொல்லையும் ஆராய்ந்து இருக்கிறார். தமிழரின் தகுதிக்கு உண்மையான ஆதாரங்களைத் தந்தவர் பாவாணர். அவரை நான் தமிழ்த் தெய்வமாகக் கருதுகிறேன்" என்று பாராட்டினார்.

இதனை எட்டத்தில் இருந்து இதழ்களில் படித்த போதும் எத்தகைய மதிப்புரை முதல்வர் வழங்கியுள்ளார்! எனப் பாராட்டுகிறோம். "எவ்வளவு ஈடுபாடு கொண்டிருக்கிறார்!" என்றும் மகிழ்கிறோம்!

முதல்வர் இன்னும் ஒருபடி மேலே செல்கிறார்: "அரசு நூல் நிலையங்களுக்கு இதுவரை எந்தத் தனிப் பெயரும் தரப்படவில்லை. இனி அரசு நூல் நிலையத்திற்குப் பாவாணர் பெயர் வைக்க ஏற்பாடு செய்யப்படும்" என்கிறார். இதனைக் கேட்ட நாம் "பாவாணர் தம் முழுதுணர்வுக்குத் தக்க வகையில் தகவான நினைவுச் சின்னம் ஈது" என்று விம்மலுக்கு இடையேயும் விம்மித முறுகிறோம்.

"1972 ஆம் ஆண்டு அ. தி. மு. க. துவக்கப்பட்ட நேரத்தில் பாவாணர் என்னைச் சந்தித்துப் பேசினார். அப்போதே அவருக்கு அகர முதலி தயாரிக்கும் எண்ணம் இருந்ததை வெளிப்படுத்தினார். இறுதிவரையும் அந்த எண்ணத்தின்படியே பணியாற்றினார்" என்னும் குறிப்பையும் மாண்புமிகு முதல்வர் இதே கூட்டத்தில் நினைவு கூர்ந்திருக்கிறார்.

பாவாணர் அகர முதலித்திட்டம் அரசினால் உருவாக்கப் பெறுதற்கு முன்னரே முதல்வர் தனிப்பட்ட நிலையில் அறிந்

திருக்கிறார் என்றும், அதே நோக்கிலேயே பாவாணர் இறுதிவரை இருந்தார் என்பதையும் அறிந்திருக்கிறார் என்றும் நாம் தெரிந்து கொள்கிறோம்.

15—1—79 இல் வள்ளுவர் கோட்டத்தில் திருவள்ளுவர் திருநாளில் பாவாணருக்கு முதல்வர் அவர்கள், 'செந்தமிழ்ச் செல்வர்' என்னும் விருது வழங்கிச் சிறப்பித்திருக்கிறார். "தமிழே உலக முதல் உயர்தனிச் செம்மொழி என்னும் உண்மையைத் தம் புலமைத் திறனால் நிறுவிக் காட்டிவரும் இப் பேராசிரியர் 8-5-1974 அன்று தமிழ்நாட்டு அரசால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்குநராக அமர்த்தப்பெற்றுத் தொடர்ந்து பணியாற்றி வருகிறார். தமிழ்ச் சொற்களின் வேர்முதலைத் தகவுற ஆராயும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியாக அது திகழும். வாழ்நாள் முழுவதையும் தமிழ் வளர்ச்சிக்கும் தமிழ் ஆராய்ச்சிக்குமே ஒதுக்கிய இத் தமிழ்ப் பெருமகனாரைப் பாராட்டி இத் திருவள்ளுவர் திருநாளில் 'செந்தமிழ்ச் செல்வர்' என்னும் சீரிய விருதினைத் தமிழ்நாடு அரசு வழங்கி மகிழ்கிறது'' என்னும் தகவுரை படிக்க, விருது வழங்கப் பெறுகிறது.

இவற்றாலெல்லாம் பாவாணர் புலமை, அயராப்பணி, அருமைப்பாடு, ஒப்பிலா ஒருநிலை, அவர்தம் அகரமுதலிச் சீர்மை ஆகியன வெல்லாம் தமிழக முதல்வர் அவர்களால் நன்றாக அறியப் பெற்றனவே என வெளிப்படுகின்றன. ஆனால் இவற்றுக் கெல்லாம் தகப், பாவாணர் இயக்ககத்திற்கு உதவி செய்ய பெற்றனவோ எனின், 'மகிழ்வடையுமாறு மறுமொழி இல்லை' என்பதே வெளிப்படை. அனுக்க உதவி இல்லாக்கால் அவரை அறிந்துகொண்டதால் ஆகும் பயன் என்ன? அவரைப் புகழ்தலால் மட்டும் அகர முதலி உருவாகி விடுமா?

உலகத் தமிழ் மாநாட்டில் பொழிந்த பாவாணர் மாரடைப்பால் தாக்குண்டு மருத்துவமனைக்குச் சென்றதை அறிந்த முதல்வர் மருத்துவமனைக்கு விரைந்தார். அவர்தம் பரிவான வருகை மருத்துவர்களுக்கு விரைவூட்டுகிறது; அக்கறை மீதூரப்பெற்று ஆய்ந்து கடனாற்றத் தூண்டுகிறது. பின்னரும் தொலைபேசி வழியே பாவாணர்தம் உடல்நிலையைக் கேட்டு அறிகின்றார். 15—1—81இல் பாவாணர் மீண்டும் மாரடைப்புக்கு ஆட்பட்ட செய்தியை அறிந்து பரிவுடன் மருத்துவர் இருவரைச் சென்னையில் இருந்து வானூர்தி வழியே மதுரைக்கு விரைந்து உதவி செய்ய ஏற்பாடு செய்கிறார். பின்னர்ப் பாவாணர் உடலை அரசுச் சார்பிலேயே சென்னைக்கு எடுத்துச் சென்று, அச் சார்பி லேயே நல்லடக்கம் செய்தற்கும் பல்வகையாலும் உதவுகிறார்.

இப் பரிவுக்கும் பாசத்திற்கும் உருகி நிற்கும் நாம், பாவாணர்தம் அகர முதலிப் பணிக்குக் காலத்தால் கனிந்து ஒல்லும் வகையால் உதவாத அரசு நிலையை எண்ணிக் கருகுகிறோம்! கண்ணீர் பெருகுகிறோம்!

பாவாணர்தம் உடலைப் பொன்னினும் சிறக்கப் போற்றிக் காக்க வேண்டியது எதற்காக? பாவாணர் நெடிது வாழ வேண்டும் என்பது எதற்காக? பத்தோடு பதினொன்றாக எண்ணிக் கணக்கிடு தற்காகவா? மக்கள் கணக்கெடுப்பில் ஒருவர் குறைந்துவிடுவார் என்பதற்காகவா? இல்லை! இல்லை!

பாவாணர் ஒருவர்தாமா தமிழ் மண்ணில் முதுகலைப் பட்டம் பெற்றவர்? பண்டித—புலவ—வித்துவப் பட்டம் பெற்றவர்? பன்மொழிப் புலமை பெற்றவர்? பன்னூல் ஆசிரியராக விளங்கி யவர்? இல்லை! இல்லை! இவற்றைப் பெற்றவர்கள் எண்ணற்ற வர்கள். இவற்றின் மேலும் முனைவர் பட்டமும் முதுபெரும் பதவியும் உற்றவர்களும் பலர். ஆதலால், இவற்றைக் கருதிப் பாவாண ருக்காக நாம் ஏங்கித் தத்தளிக்கவில்லை. நாம் ஏங்கித் தவித்துத் தத்தளிக்கும் காரணியம் ஒன்றே ஒன்றுதான்.

சொற்பிறப்புக் காண்டலில் பாவாணருக்கு இணையாக முன்னர் எவரும் இருந்திலர்; இப்பொழுது இருப்பாரும் எவரும் இலர்; இனி வரு வாரும் அவர்தம் தாளடிபற்றித் தளர் நடைபயின்றே அப் பணிக்குத் தம்மை அணியமாக்கிக் கொள்ளல் வேண்டும்! இத்தகைய உயர்வற உயர்ந்த ஒரு பெருமகனாரை—ஒல்லும் வகையெல்லாம் உவந்து கடனாற்ற முந்து நின்ற முயற்சிப் பெருக்காளரை—உள்ளத்தில் தோன்றிய உண்மையை எதற்காகவும் ஒளியாமல் வெளியிடும் அரிமா அன்ன ஆற்றலரை—"தமிழ் எதிர்காலத்தில் வாழவும் வளரவும் இன்றியமையாத பணி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் தொகுப்பேயாதலாலும், இதை என்னையன்றி வேறெவரும் செய்ய இயலாது ஆகையாலும்" என்றும், "மொழியாராய்ச்சியில் ஆழமூழ்கித் தமிழின் அடிநிலை கண்டு தமிழே திரவிடத்திற்குத் தாயும், ஆரியத்திற்கு மூலமும் என்னும் உண்மை உணர்ந்ததனாலும், என் மொழி யாராய்ச்சி நூல்கள் பல வெளிவர வாய்ப்பு நேர்ந்தமையாலும், என்னையன்றி வேறெவரும் இவ் வாராய்ச்சி செய்யாமையாலும், இவ் வாராய்ச்சிக்கு இன்றியமையாத பண்புகளையெல்லாம் இறைவன் என் பிறப்பிலேயே அமைத்துவிட்டமையாலும், ஆங்கிலப் பணியாற்ற இருந்த என்னை இறைவன் தமிழ்ப் பணிக்குத் தடுத்தாட் கொண்டதாகவே கருது கின்றேன்" என்றும் குறிக்கும் உரவோனைக்—"கண்ணிலான் பெற்று இழந்தது போலவும்", "அங்கணத்துள் உக்க அமிழ்து" போலவும், ஆக்கிவிட்ட ஆக்க அரவணைப்பு இல்லாப் போக்கை எண்ணியே புண்ணுற வேண்டியுள்ளது!

அகர முதலி இயக்கக ஏந்துகளுக்குப் பாவாணர் நினைவூட்டு மடல்கள் விடுக்கவில்லையா? எவரையும் அனுகி உண்மை நிலையை உணர்த்தவில்லையா? உணர்த்தியும் பயன் உண்டாகவில்லையா? பாவாணரே பகர்கின்றார் :

"அசிரியா, சதாசிவம், நீங்கள், ஒரு திருத்தாளர் ஆகிய நால்வர் அமர்த்தம் பற்றி அடிக்கடி எழுதியும் அரசு அசையவில்லை. இதுபற்றி முதல்வரைப் பார்க்கவும் முயன்று வருகிறேன்".

"நம் அகர முதலியின் அருமை பெருமையை அரசு இன்னும் உணரவில்லை. முதன் மடலம் முதற்பகுதி அச்சிற்கு அணியமாயுள்ளது. அது வெளிவந்தபின் நமக்கு வேண்டியதெல்லாம் வேண்டிப் பெற்றுக் கொள்ளலாம்."

"மாநாட்டிற்குமுன் (உலகத் தமிழ் மாநாட்டிற்குமுன்) முதற் பகுதியை வெளியிட்டுவிட்டால், நாங்கள் தக்க ஆட்களைப் பிடித்து முதல்வரை நெருக்கி அகர முதலித் துறைக்கு வேண்டிய பணியாளரையெல்லாம் உடனே அமர்த்த ஏற்பாடு செய்கின்றோம் என்று புலவர் இருவர் சொன்னதை மேற்கொண்டு வேலை முனைந்து நடந்து வருகின்றது. முதற்பகுதி அகரமுதற் சொற்கள் தட்டச்சில் ஆயிரம் பக்கம்."

"அகரமுதலிக்குப் பயன்படாத பலர் இவ்வகர முதலித்திட்டக் கணக்குத் துறையில் அமர்த்தப்பட்டு, வேலையின்றிச் சம்பளம் வாங்கி வருகின்றனர். சொற்றேருப்பாளர் மூவரை அமர்த்துவர் என்னும் நம்பிக்கையில்தான் கணக்குத் துறைப் பணியாளரை அமர்த்த இசைந்தேன்"

"அமர்த்தம் பற்றி அடிக்கடி எழுதியும் அரசு அசையவில்லை" "அகரமுதலியின் அருமை பெருமையை அரசு இன்னும் உணரவில்லை" "சொற்றெருப்பாளர் மூவரை அமர்த்துவர் என்னும் நம்பிக்கையில்தான் கணக்குத் துறைப் பணியாளரை அமர்த்த இசைந்தேன்" என்பனவெல்லாம் இயக்கக ஏந்துகளுக்காகவும், அகரமுதலிப் பணி ஆக்கத்திற்காகவும் பாவாணர் எடுத்துக் கொண்ட முயற்சிகளைத் தெரிவிக்கும்! எனினும் கொடுக்கப்பெற்ற குதிரைக் கொட்டடி மாறவே இல்லை; குறித்த அமர்த்தங்களும் கூடவில்லை!

இனிச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் தனிப் பெருந் தன்மையை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். அத்தகைய பணிக்குரிய கருவி நூல்கள் எத்துணை எத்துணை வேண்டும்! கருவி நூல்களுக்கென ஒதுக்கப்பெற்ற தொகை ஆண்டொன்றுக்கு

ரூ. 200 மட்டுமே! ஒரு தொடக்கப் பள்ளி நூல்நிலையத்திற்குக் கூட இத் தொகை, நூல்கள் வாங்குதற்குப் போதாது என்பதை எவரும் அறிவர்!

பாவாணர்தம் இளந்தைப் பருவம் தொட்டே உயிர்ப்பாகக் கொண்டது சொல்லாய்வு; ஆதலால், விலை மதிப்பிட முடியாத—அருங்கலைச் செல்வங்களாக மதிக்கத்தக்க—அகரமுதலிகளைத் தொகுத்து வைத்திருக்கிறார். அவை இரண்டா மூன்று? இருபதா முப்பதா? எட்டு நிலைப்பேழைகள் நிரம்ப அகர முதலிகள்! பல்வேறு மொழி அகர முதலிகள்!

'மூர்' அங்காடியில் ஓரன்பர்! அவர் பாவாணர்க்குத் தனிப் பேரன்பர்! ஆர்வலர்! அரு நூல்களைத் தொகுத்து ஆர்வத்தால் வழங்குபவர்! 'மராட்டி மொழி' அகர முதலி ஒன்று அவர் கைக்கு வந்தது. மேனாட்டவர் அறுநூற்றைம்பது ரூபா விலைக்குக் கேட்டும், பாவாணருக்கு 480 ரூபா விலையிட்டுத்தந்தார்! ஓர் அகர முதலிக்கு நானூற்று எண்பது ரூபா! அரசு ஆண்டுக்கு ஒதுக்கியது—அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்கு ஒதுக்கியது—ரூபா இருநூறு!

"நேற்றுக் கொடுத்தனுப்பிய சாம்பசிவம் பிள்ளை அகரமுதலி, அடிகள் நூல் நிலையத்தைச் சேர்ந்ததா? நுங்களதா?

"இன்று புதுப்படியேனும் பழம்படியேனும் விலைக்குக் கிடைக்குமா? நூறு ரூபா வரை கொடுக்கலாம்.

"எனக்கொன்று மிகத்தேவை. இயன்றவரை முயன்று பார்க்க" —இதனை 1—1—76இல் எழுதுகிறார் பாவாணர்.

"சாம்பசிவம் பிள்ளை அகரமுதலி எனக்கு உடனடியாகத் தேவை. உடனே கழகம் சென்று இன்றே மும்மடலத்தையும் தருவித்துத் திங்கள் கிழமை அலுவலகம் கொணர்ந்து ஏவலனிடம் கொடுத்தனுப்புக" —இதனை 9—1—76இல் எழுதுகிறார்.

சங்கத் தமிழ் அகர முதலியைப் பெற விரும்பினார் பாவாணர். முதன் மடலம் கிடைத்தது. எஞ்சிய இருமடலங்களும் கிடைத்தில.

"சங்கத் தமிழகர முதலி ஏனையிரு பகுதிகளும் கிடைப்பின் மிக நன்றாம். பன்மடங்கு விலையேற்றினும் கொடுத்து விடுவேன்" என்று 27—11—80இல் எழுதினார். அவர்தம் அகரமுதலித் தொகுப் பார்வம் அத்தகையது! அவ்வார்வம் அரசு வழங்கும் 200 ரூபா

அளவில் கட்டுப்பட்டு நிற்பதோ? "சான்றோர் கடன் கொண்டும் செய்வர் கடன்" என்பதை மெய்ப்பிப்பது அவர் வாழ்வு.

"திருவாய்மொழி ஈடுகளையெல்லாம் ஒருங்கு வாங்க விரும்பினேன்; ஆனால் அப்பொழுது எவ்வகையாக முயன்றும் என் இல்லாமை அவற்றை வாங்க இடந்தரவில்லை! இப்பொழுது வாங்க முடியும்? ஆனால் அந் நூல் கிடைப்பது இல்லை" என்று பாவாணர் சொல்லும்போது கேட்கும் உள்ளம் உருகி நைதல் உண்மை! 'தீராக்காதலர்' திருமொழிக்கு ஒருமொழி மறுமொழி உண்டோ?

பாவாணர் பெற்ற சம்பளத்தில் பெரும்பகுதி அவர்தம் நூல் தொகுப்புக்கே பயன்பட்டது என்பதை நெருங்கியவர் அனைவரும் அறிவர். அதனை அறியும்போது அரும்பெருந் தொண்டர் சுப்பிரமணிய சிவனாரைக் குறித்துத் திரு. வி. க. கொண்டிருந்த கருத்தைத் திரு. வெ. சாமிநாத சர்மா எழுதுவது நினைவில் எழுகின்றது: "தாம் கொடுக்கும் தொகை சிவனாரின் சொந்த உபயோகத்திற்குக் குறைவாகவும், பொது நலப்பணிக்கு அதிகமாகவும் செலவிடப்படும் என்பதும் முதலியாருக்குத் தெரியும்" (நான் கண்ட நால்வர்)

புனைவுத் திறம் மல்கிய புகழ்ச் சிலையை உடைத்துப் போட்டுவிட்டுச் சிறப்பொடு அதனைப் பூசனை செய்வதால் ஆவது என்ன? புலமைச் செல்வரை இழந்துவிட்டு அவரைப்பற்றி எண்ணிப் புலம்புவதால்தான் ஆவது என்ன? எண்ணிப் பார்க்கவேண்டிய இன்றியமையாச் செய்தி இது!

(தொடரும்)

---

## நீதிமன்றத்தில் தமிழ்!

*"நீதி மன்றத்தில் வழக்காடத் தமிழ் மொழியைப் பயன்படுத்த முடியாது என்று கூறுவோர், அந்த மொழி வளர்ந்துள்ள அளவுக்குத் தம்மை வளர்த்துக்கொள்ள இயலாதவர்களாகத்தான் இருப்பார்கள்.*

*"தன் கணவன் கொலையுண்டதைப் பாண்டியன் அரசவையில் எடுத்துரைத்து வெற்றிகண்ட கற்புக்கரசி கண்ணகி பயன்படுத்தியது தமிழ் மொழிதான்! அதைவிடப் பெரிய வழக்கா வந்து விடப்போகிறது!"*

பேரறிஞர் அண்ணா

# சைவசித்தாந்த இலக்கியத்தில் வேட்டுவன் எனும் குளவி

[திரு. பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

"வண்டுக ளாகிமாறும் மயிர்க்குட்டி மற்றோர் செந்துப்
பண்டைய வுருவந் தானே வேட்டுவ னாய்ப்பி றக்கும்
கண்டுகொள் யோனி யெல்லாம் கன்மத்தால் மாறு மென்றே
கொண்டன சமயம் எல்லாம் இச்சொல்நீ கொண்ட தெங்கே"
—சிவஞான சித்தியார் சுபக்கம் - 43

சிவஞான சித்தியார் சுபக்கத்தில் கூறப்பட்டுள்ள வேட்டுவன் என்பது ஒருவகைக் குளவியாகும். இது கல்லாடத்தில் 'வேட்டுவப் பெயரளி' என்று வழங்கியுள்ளது.

"........வேட்டுவப் பெயரளி
யிடையுறழ் நுசுப்பின் குரவைவாய்க் கடைசியர்"
(கல்லாடம் 27 : 21 – 22)

வேட்டுவனென்ற பெயரையுடைய குளவியினது இடையைப் போன்று இடையினையுடைய உழத்தியர் என்று மிக அழகான உவமை கல்லாடத்தில் கூறப்பட்டுள்ளது. வேட்டுவப் பெயரளி என்று கூறியது வேட்டுவன் என்ற பெயரையுடைய பூச்சியைக் குறித்ததாகும். இக் காலத்தில் ஆங்கிலத்திலும் மகளிர் இடைக்குக் கல்லாடத்தில் கூறப்பட்ட அழகிய உவமையே (Wasp - Waisted) வழங்குவதும் குறிப்பிடத்தக்கதாகும். பெண்டிர் இடையை மிகவும் குறுகிக் காணப்படும் ஒருவகைக் குளவியின் இடைக்கு ஒப்பிட்டுக் கூறினது பொருத்தமாகும்.

சிவஞான சித்தியாரில் வரும் செய்தி ஆராயத் தக்கதாகும். மயிர்க்குட்டி வண்டுகளாகி மாறும் செந்து (ஜந்து) வேட்டுவனாகப் பிறக்கும் என்று கூறப்பட்டுள்ளது. மயிர்க்குட்டி என்பது கம்பளிப் புழுவைக் குறித்ததாகும். இலைகளில் காணப்படும் கம்பளிப் புழுக்கள் வண்டுகளாக அஃதாவது ஒருவகைப் பூச்சிகளாக மாறுவதுண்டு. ஒருவகைக் கம்பளிப் புழு, பட்டுப் பூச்சியாக மாறுகின்றது. சிவஞான சித்தியாரில் மயிர்க்குட்டி போன்ற மற்றோர் செந்து (ஜந்து) அஃதாவது மற்றும் ஒரு புழு தன் பழைய வடிவமான வேட்டுவனாக மாறும் என்று உரை கூறப்பட்டுள்ளது. உரையில் மயிர்க்குட்டி வண்டாக அச்சு மாறும்; மற்றும் ஒரு புழு வேட்டுவனாக அச்சுமாறும் என்று கூறப்பட்டுள்ளது. ஒருவகைப் புழு வேட்டுவன் எனப்படும் குளவியாக மாறுவது இயற்கையில் உண்மைதான். குளவி புழுவைக் கொட்டிக்கொட்டி பூச்சியாக்குவது போல என்று தவறாகத் தற்காலத்தில் கூறுவர். குளவி புழுவைத் தன்னினமாக்குகிறது என்று ஒரு பழமொழி வழங்குகின்றது. மண்கூடு கட்டும் ஒருவகைக் குளவி ஒருவகைப் பச்சைப் புழுவைத் தூக்கி வந்து கொட்டி மயக்கமடையச் செய்து அந்தப் புழுவின்மேல்

முட்டையிட்டு, அதன்மேல் மண்கூடு கட்டி மறைத்துவிடுகின்றது. முட்டைகள் பொரிந்து புழுவானதும் முன்னரே குளவி மண் கூட்டில் வைத்த புழுவை உணவாக உண்டு வளர்ந்து குளவியாக மாறுகின்றது. பச்சைப் புழுவைக் குளவி எடுத்துச் செல்வதைப் பார்த்த நாட்டார் மக்கள் அந்தப் புழுவைக் கொட்டிக் கொட்டிப் பூச்சியாக்குவதாகக் கருதினர். ஆனால், குளவிகளின் வாழ்க்கை வரலாற்றை ஆராய்ந்தறிந்த பூச்சி நூலறிஞர்கள் (Entomologists) இதன் உண்மையைத்தெரிந்து கூறியுள்ளனர். இந்தக் குளவியை இக் காலத்தில் 'மண் குளவி' என்றழைப்பர். சிவஞான சித்தியாரில் கூறிய வேடடுவனைப் பற்றிச் சிவஞான போதமும் கூறியுள்ளது.

''வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம்
அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனும் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து.'' —சிவஞானபோதம் - 3

வேட்டுவனுதலை விரும்பும் புழுவிற்கு வேட்டுவன் விரும்பிய வடிவினைக் கொடுக்குமாறுபோல இறைவனும் அவரவர் வேண்டு முருவினைக் கொடுத்து அவ் வினைக்குத்தக்க பயன்களையும் கூட்டுவன். ஆதலான் அது கொண்டு சுதந்திரத்திற் கிழுக்கென்னை என்று உரை கூறுவர். வேட்டுவன் எனும் குளவி தனது புழுவைக் கொட்டிக் கொட்டிப் பூச்சியாக்கும் என்ற நாட்டார் மக்கள் நம்பிக்கையைத் தத்துவக் கொள்கையாக விளக்க மெய்கண்டார் கையாண்டுள்ளார். வேறு பூச்சிகளின் பச்சைப் புழுவையோ, கம்பளிப் புழுவையோ (மயிர்க்குட்டி) எடுத்து வேட்டுவன் எனும் குளவி அப் புழுவின்மேல் முட்டையிட்டு அதன்மேல் மண் கூட்டைக் கட்டுகிறது. நாட்டார் மக்கள் அதை வேறு வகையாகக் கருதி, தனது புழுவையே கொட்டிக் கொட்டிப் பூச்சியாக்குகிறது என்று கூறினர். அதையொட்டியே சிவஞான போதத்திலும் வேட்டுவனுதலை விரும்பும் புழுவிற்கு வேட்டுவன் விரும்பிய வடிவினைக் கொடுக்கும் என்று கூறினர். இதை வித்தகம் என்று கூறியுள்ளனர். இதில் ஓர் இயற்கை உண்மையுள்ளது. பெரும்பாலும் பூச்சிகளாக மாற வேண்டுமாயின் புழுவாக முட்டையிலிருந்து வந்து மாறவேண்டும். இதை அறிவியலில் Metamorphosis என்று கூறுவர். இந்த உருவ மாற்றத்தையே அச்சு மாறுதல் என்று பிற்காலத்திய உரையாசிரியர் கூறியுள்ளார். Metamorphosis என்பதற்கு அச்சு மாறுதல் என்று பெயர் வழங்குதல் சிறந்த அறிவியல் பெயராகும். உருவ மாற்றம் என்பதைவிட 'அச்சு மாறுதல்' என்று கூறிய வழக்கு பண்டை மரபு தழுவிய அறிவியல் வழக்காகும். இலக்கிய மரபு தழுவிய, நாட்டார் பண்பாட்டில் தழுவிய வழக்குகளைப் போற்றி வழங்கினல் அறிவியலும் வளரும், பண்டைத் தமிழ்ப் பண்பாடும் மரபும் வளரும். ஒருவகைப் புழு

வேட்டுவனெனப்படும் குளவி உருவை அடைய விரும்புகின்றது என்று கருதினர். ஆனால், இயற்கையில் தனது குஞ்சுப்புழு தனது உருவை அடையவே குளவி பச்சைப் புழுவைத் தூக்கி வந்து அதன்மேலே முட்டையிட்டு மண் கூட்டால் மூடுகிறது. இந்தக் குளவியை இக்காலத்தில் மண் குளவி என்றழைப்பதைக் காணலாம். பிற்காலத்திய உரையில் 'கூட்டா மண்போற் குளிர்ந்து' என்ற கடைசி வரியை 'வித்துண்டா மூலம் முளைத் தவா தாரகமாம்' என்ற முதல் வரியோடு இணைத்து வித்துக்கு ஆதாரமான நிலம் குளிர்ந்தவழி அதன்கண்ணுள்ள வித்தினின்று முளை தோன்றியதென்பர். ஆயினும் அவ்வாறு கொண்டு கூட்டிப் பொருள் கூருமல் நேராகப் பொருள் கூறினுல் வேட்டுவனும் அப்புழுப்போல் வேண்டிய வேட்டுவ உருவைக் கொடுத்து உதவும் குளிர்ந்த மண் கூட்டானே என்றும் பொருள் கூறலாம். ஏனென்ருல் மண் குளவி என்று இக் காலத்தில் அழைக்கப்படும் இக் குளவி, குளிர்ந்த மண், ஈரமண்ணுல் கூடு செய்கின்றது. அந்தக் கூட்டிலிருந்துதான் வேட்டுவனும் குளவி உருவைப்பெற்று வெளி வருகின்றது. ஆதலின் இந்தச் சிவஞானபோதப் பாட்டிற்குக் கூறும் பழக்கமான உரை பொருத்தமானதா என்பதை மேலும் ஆராயவேண்டும்.

இடை சிறுத்த ஒருவகைக் குளவிக்கு வேட்டுவன் என்ற பெயர் வந்ததற்குக் காரணமுண்டு. இந்த வகைக் குளவிகள் பூச்சிகளை வேட்டையாடித் தின்பனவாகும். பெரும்பாலும் தேன் கூடு அருகில் பதுங்கியிருந்து தேனீக்களை வேட்டையாடித்தின்னும் தன்மையால் வேட்டுவன் என்று பொருத்தமாக அழைக்கப்பட்டது. சிலந்திப் பூச்சிகளையும் வேட்டையாடும் இந்தக் குளவியை Icheumon என்று அறிவியலில் அழைப்பர்.

வேட்டுவன் என்ற பெயர் பேச்சுமொழிப் பெயராகத் தெரிகின்றது. வேட்டுவன் என்ற பெயர் பொதுவாக வேட்டையாடும் ஓரின மக்களைக் குறிக்கும். வேடரினத்தார் ஈழ நாட்டின் முதல் மூத்த பழங்குடி மக்களாகக் கருதப்படுகின்றனர். ஆனால், அதே பெயரைச் சிறப்புப் பெயராக வேட்டையாடும் குளவிக்கு இட்டுக் கூறியது பேச்சு வழக்காகத் தெரிகின்றது. இதுபோன்று இடையன், வண்ணான் என்ற நாட்டார் மக்கள் வழக்குகள் பூச்சி வகைகளைக் குறிப்பதைக் கவனிக்க வேண்டும். நாட்டு மக்கள் இடையன் பூச்சி என்று அழைப்பதைக் காணலாம். இடையன் தாங்கிய கோல்போல இந்தப் பூச்சியும் நீண்ட கைகளைப் போன்ற உறுப்புக்களைப் பெற்றுள்ளது. சங்க நூல்களில் கோல் தாங்கிய இடையனைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. இடையன் என்ற சொல்லே சிறப்புப் பெயராக நாட்டார் மக்கள் வாயில் இந்தப்

பூச்சியைக் குறிப்பிட்டு வழங்கியிருக்கலாம். இடையன் பூச்சியும் வேட்டையாடும் பூச்சியேயாகும். நீண்ட கை போன்ற உறுப்பைக் கும்பிடுவதுபோல வைத்து ஆடாமல் அசையாமல் காத்திருக்கும் போது எந்தப் பூச்சியாவது நெருங்கினல் இடையன் பூச்சி சடுதியில் பிடித்துக் கொன்று உண்டுவிடும். இதனல் இந்தப் பூச்சியைக் கும்பிடும் பூச்சி (Praying Mantis) என்று ஆங்கிலத்தில் அழைப்பர். இந்த இடையன் பூச்சியில் பெண் பெரியதாகவும் ஆண் சிறியதாகவும் இருக்கும். இணைவிழைச்சுக் காலத்தில் (Mating Season) சேருவதற்கு முன்னல் ஆணும் பெண்ணும் நடனமாடிக் கொண்டே இணை சேரும். இணை சேர்ந்தபின் பெண் பூச்சி ஆண் பூச்சியைக் கொன்று உண்டுவிடும். மலையாளத்தில் எட்டுக்கால் பூச்சியை நாட்டு மக்கள் 'வண்ணான்' என்று அழைக்கின்றனர். சிலவகை எட்டுக்கால் பூச்சிகள், சிலந்திகள் இடும் முட்டைகளை மூட்டைபோல வயிற்றின் அடியில் தூக்கிச் செல்வதால் வண்ணான் என்று அழைத்தனர். இந்த வழக்கு வடக்கு மலையாளத்தில் காணப்படுகின்றது.

இலக்கண உரையாசிரியர்கள் விரவுப் பெயராகச் சாத்தன், சாத்தி, மருதி முதலிய பெயர்களைக் காட்டியுள்ளனர். இந்த வழக்குகள் உயர்திணையில் மட்டுமின்றி அஃறிணையிலும் விரவி வழங்கும் என்று கூறுவர். சாத்தன் என்ற வழக்கு விரவுப் பெயராக அஃறிணைக்கு வழங்குவதைத் தற்காலத்தில் பேச்சுத் தமிழில் காண முடியவில்லை. ஆனல், கேரளத்தில் இன்றும் கோழிச்சாத்தன் என்று வீட்டுக் கோழியையும், ஆனைச்சாத்தன் என்று கருங்குருவியையும், காராடன் சாத்தன் என்று நீண்ட வால் கருங்குருவியையும் பேச்சு வழக்கில் அழைக்கின்றனர். தமிழில் ஆண்டாள் திருப்பாவையில் மட்டுமே ஆனைச்சாத்தன் என்று கருங்குருவியை அழைக்கும் வழக்கு காணப்படுகின்றது. அன்பு காரணமாகவும் பயன் காரணமாகவும் மாட்டை இத்தகைய விரவுப் பெயரால் அழைத்தனர் என்று பிற்காலத்திய ஆசிரியர் விளக்கம் கூறினர். அன்பும், பயனும் காரணமாக இருக்கலாம். பழக்கமும் காரணமாக இருக்கலாம். வீட்டில் வளர்க்கும் நாயை முனியன், கலியன் என்றெல்லாம் பெயரிட்டு அழைப்பதும் இலக்கண உரையாசிரியர் கூறிய மரபை ஒட்டியதே என்பது தெரிகின்றது. ஆதலின் வேட்டுவன் என்ற பெயர் வழக்குப் பெயராகத் தெரிகின்றது. மெய்கண்டார் சைவசித்தாந்தத்தை விளக்குவதற்கு வேட்டுவன் என்னும் குளவியின் வாழ்க்கைச் செய்தியைப் பயன்படுத்தியிருக்கிருர் என்று தெரிகின்றது.

———

# பாவாணரைப் பற்றிய நினைவுகள்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

"உலகத் தமிழ் மாநாட்டில் கலந்துகொள்வதற்காக மதுரை செல்வோம். சனவரி 3ஆம் பக்கல் காரிக்கிழமை (சனி) பிற்பகல் 4 மணிக்கு என் இல்லத்திற்கு வருக. 4-30 மணிக்கே எழுமூர் தொடர்வண்டி நிலையம் செல்வோம்" என்றார். அவ்வாறே 4 மணிக்குச் சென்றேன். சோர்ந்து காணப்பட்டார். "ஐயா, உடல் நலக் குறைவான நிலையில் வெளியூர் செல்வது நன்றன்று. மதுரைப் பயணத்தை நிறுத்தி விடலாம். பயணச் சீட்டை நீக்கம் செய்து எஞ்சிய தொகையை வாங்கி வரட்டுமா?" என வினவினேன்.

"வேண்டாம், மதுரைக்குச் சென்றேயாக வேண்டும். இரு நாட்களுக்கு முன்பு சிறிது காய்ச்சல் இருந்தது. நீர்க்கோள் என்னையொன்றுஞ் செய்யாது. மதுரை மாநாட்டுக்கு ஏன் போக வேண்டும் என்று விரும்புகிறேன் தெரியுமா? அக்பர் என்னும் பேரரசன் பல்சமய உண்மைகளைக் கேட்டுத் தெளிவதற்காகவே 'இபாபத்துகானு' என்னும் பெரிய மாளிகை எழுப்பினான் என்றும், கனிசுகன் என்னும் மன்னன் 3500 பேரறிஞர்களைக் கூட்டிப் பவுத்தமத உண்மைகளைப் பரப்ப விழா எடுத்தான் என்றும் எழுதும் வரலாற்றாசிரியர்கள், பாண்டியர்கள் மூன்று தமிழ்க் கழகங்களை நிறுவித் தமிழ் வளர்த்ததைத் தெளிவாக வெளியுலகிற்குக் காட்ட வில்லை. தமிழ் வரலாறு மறைக்கப்பட்டிருக்கிறது. இந் நிலையில் தமிழக அரசு 'உலகத் தமிழ் மாநாடு' நடத்துவது போற்றற்குரியது. வேறெங்கேனும் உலகத் தமிழ் மாநாடு நடந்தால் நான் போகவேண்டியதில்லை. பாண்டியர் தமிழ் வளர்த்த மதுரைத் திருநகரில் நடக்கும் மாநாட்டிற்குப் போயேயாக வேண்டும். கண்ணாரக் கண்டு மகிழ வேண்டும். தமிழ்ப் பகைவர்களான வையாபுரிகளே இடம் பெற்றிருந்த இதற்கு முந்திய மாநாடுகளைப் போலன்றி, என்னைப் போன்ற வாய்மைத் தமிழர்கள் அழைக்கப்பட்டிருக்கும் இந்த மாநாட்டுக்கு நான் போகாமலிருக்கலாமா? புறப்படும்; மணி 4-30 ஆகிவிட்டது" என்றார்.

தூதன் மகிழுந்து (Ambassador Car) வாயிலில் வந்து நின்றது. பாவாணர் குப்பாயம் அணிந்துகொண்டார். அதன் பொத்தான்களைச் சரியாகப் போட்டேன். ஏவலன் பெட்டிகளை எடுத்துவர, மகிழுந்தில் அமர்ந்து புறப்பட்டோம். அடுத்த பதினைந்தாம் நாள் காரிக்கிழமை (17—1—81) அதே 4-30

மணிக்குப் பாவாணரின் வீட்டிலிருந்து அவருடைய திருவுடல் அடக்கத்திற்காகக் கல்லறைப் பாயலில் கிடத்த இடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப்படும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அதை நினைந்தால் நெஞ்சு நெக்குருகுகின்றது.

சென்னை எழூம்ர் தொடர்வண்டி நிலையத்தில் தம்மைக் காண வந்த அன்பர்களுடன் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார். 7 மணியளவில் புறப்பட்ட பாண்டியன் விரைவானில் (Pandian Express) முதல் வகுப்புப் பெட்டியில் பாவாணரும் நானும் அமர்ந்தோம். பாவாணருக்குத் துயிலிருக்கை மேற்றட்டில் (upper berth) தரப்பட்டிருந்தது. அதனை மாற்றிக் கீழ்த்தட்டில் துயிலிருக்கை தரச் செய்தேன். இரவு 12 மணிவரை தமிழ் வளர்ச்சி குறித்தும் அகர முதலிப் பணி குறித்தும் பல அரிய கருத்துக்களை வழங்கிக்கொண்டிருந்தார்.

எருதந்துறை ஆங்கில அகர முதலியை (Oxford Dictionary) 400 அறிஞர்கள் 70 ஆண்டுகள் உழைத்துத் தொகுத்திருக்கிறார்கள். 5 இலக்கம் சொற்கள் அவர்களால் தொகுக்கப்பட்டன. நம் துறையில் நாம் இருவருமே உட்கார்ந்து கொண்டு என்ன செய்வது? வெப்தர் (Webster) ஆங்கில அகர முதலி தொகுத்த போது ஆங்கிலம் வழங்கும் 46 நாடுகளுக்கும் நேரிற்சென்று பன்னாள் தங்கிச் சொற்றொகுத்தார்கள். நமக்குப் போதிய துணையாட்களும் இலர். கட்டடமும் ஏந்தாக இல்லை. அதற்காக மனந்தளரப் போவதில்லை. அரசு உதவும் என்னும் நம்பிக்கையிருக்கிறது. நான் உம்மை நன்கு பயிற்றியிருக்கிறேன். மதுரை இளங்குமரனாரையும் நம் துறையில் அமர்த்தி நன்கு பயிற்றி விடுகிறேன். மேலும் பதினைவரைத் துணைத் தொகுப்பாளராக அமர்த்தி அகர முதலியின் மடலங்களைச் செவ்வனே முடித்து விடலாம். மணி 12 ஆகிவிட்டது, நீர் உம் இருக்கைக்குச் செல்லும் எனப் பணித்தார். மறுநாள் வைகறை மதுரையில் புலர்ந்தது.

பாவாணருக்கு மதுரை அரிமா விடுதியில் அறை ஒதுக்கப்பட்டிருந்தது. எனக்குச் சந்தோச விடுதியில் அறை ஒதுக்கியிருந்தனர். எனக்குத் துணையாக அரிமா விடுதிக்கே அறை மாற்றிக் கொண்டு வந்துவிடும் எனப் பணித்தார். இரு நாட்களுக்குப்பின் மாற்றித் தருவதாக விடுதியினர் கூறினர். 4—1—81 அன்று மாலையில் உலகத் தமிழ் மாநாட்டுத் தொடக்கவிழா நடைபெற்றது. அன்றிரவு 10.30 மணிவரை மாநாட்டில் அமர்ந்திருந்தார். அதன்பின் அறைக்கு வந்து 1 மணிவரை விழித்திருந்தார். மறுநாள் காலை (5—1—81) 10 மணிக்கு மூவேந்தர்

அரங்கில் பொதுநிலைக் கருத்தரங்க நிகழ்ச்சியில் பாவாணரும் நானும் சொற்பொழிவாற்ற வேண்டியிருந்தது.

காலை 8-30 மணிக்கே பாவாணரின் அறைக்குச் சென்றேன். "மொழிநூற் சான்றுகளை எடுத்துக் காட்டி இன்று ஒரு மணி நேரம் பேசப் போகிறேன். என் ஆராய்ச்சியாற் கண்ட உண்மைகள் அனைவர்க்கும் பயன்படட்டும்" என்றார். "ஐயா, 14 பேரைப் பேச்சாளராகப் போட்டிருக்கிறார்கள். ஒருவருக்கு 15 நிமையம் தானே ஒதுக்குவார்கள்!" என வினவினேன். "கற்ற மேலோர் முன் மற்றவர்கள் தம் பேச்சைக் குறைத்துக் கொள்வதுதானே அழகு" என்றார். அவர் உரைத்தவாறே ஒரு மணி நேரம் கடல் மடை திறந்தாற்போல் கருத்தூறும் எழுச்சி யுரையாற்றினார். பன்மொழிப் புலவர் கா. அப்பாத் துரை உரை யாற்றிய போதும் பாவாணர் உரையாற்றிய போதும் காலங் கருதிச் சிலர் கைதட்டினர். அதனைப் பாவாணரும் பொருட் படுத்தவில்லை. அவையோரும் பொருட்படுத்தவில்லை. அனைவரும் அவர் பேச்சை அமைதியாக விரும்பிக் கேட்டு மகிழ்ந்தனர். அன்று பதினான்காவது பேச்சாளனாகப் பிற்பகல் 2-40 மணிக்கு நான் உரையாற்ற அழைக்கப்பட்டேன். மூன்றே நிமையத்தில் சுருக்க மாகப் பேச்சை முடித்துக் கொண்டேன். பாவாணரும் நானும் பிற்பகல் 3 மணிக்குப் புறப்பட்டு அரிமா விடுதி அறைக்குச் சென்றோம். செல்லும் வழியில் தாம் நினைத்தவற்றை முழுமை யாக எடுத்துச் சொன்னதாக மகிழ்ந்தார். அவையில் சிலர் கை தட்டியதைத் தவறாக எடுத்துக்கொண்டீர்களா என வினவினேன். "அவர்கள் காலங் கருதிக் கைதட்டினார்கள். அது ஒரு பெரிய செய்தியன்று. பிற்பகல் 3 மணியானாலும் முதல்வரும் அமைச்சர் களும் பொதுமக்களும் அவையில் அமர்ந்திருந்து தமிழைச் செவிமடுத்தார்களே அதுவன்றோ பெரிய செய்தி" என்று கூறி அவருக்கே உரிய பாங்கில் மனம் விட்டுச் சிரித்தார்.

உலகத் தமிழ் மாநாட்டை முதலமைச்சர் மாண்புமிகு ம. கோ. அழகமதியனார் நடத்தினாலும் அனைத்துக் கட்சியினரும் தமிழ்த் தாயின் மக்களே. தாய்க்கு நடக்கும் விழாவில் எந்த மகனாவது கலந்துகொள்ளாமலிருந்தால் தாய்க்கு வருத்தமன்றோ விளையும்? வள்ளுவர் கோட்டம் எழுப்பிய பெருமைக்குரிய அருட்செல்வனாரும் மூவேந்தர் அரங்கில் உரையாற்றியிருந்தால் தமிழ்த்தாய் மேலும் மகிழ்ந்திருப்பாள். பொது நிகழ்ச்சிகளிலாவது கட்சி வேறுபாடு மறந்து தமிழர்கள் ஒரே குரலில் ஒலிக்க வேண்டுமன்றோ! அது அரசியல். அதனை விடுக்க. ஏதோ அகவையிலும் ஆராய்ச்சியிலும் முதியவன் என்பதாலும் தமிழினம் செழிக்க இளைய தலைமுறைக்கு

அறிவுரை வழங்குவது தவருகாது என்பதாலும் இதனைக் குறிப்பிட்டேன் என்ருர். அவர் பேச்சில் உருக்கம் இருந்தது. தமிழும் தமிழினமும் உலக அரங்கில் உயர வேண்டும் என்னும் ஏக்கமும் இருந்தது.

அன்று பிற்பகல் 4 மணியளவில் தமிழன்பர் பலர் அடுத்தடுத்துப் பாவாணரைக் காண வந்தனர். "ஐயா சிறிது ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். நான் என் அறைக்குச் சென்று மீண்டும் 8-30 மணிக்கு வருகிறேன்" என்று புறப்பட்டேன்.

நான் 8-30 மணிக்கு மீண்டும் வந்தபோது பாவாணர் நெஞ்சு வலியால் துடித்துக் கொண்டிருந்தார்; பேச முடியவில்லை. தாளில் நெஞ்சு வலி மிகுதி என எழுதிக் காட்டினுர். உடனே மருத்துவர் வந்து மருத்துவம் செய்தார்.

நெஞ்சுவலி மிகுதியாக இருக்கிறது; இவரைத் தலைமை மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லவேண்டும் என்று மருத்துவர் கூறினுர். அவர்கள் செய்த மருத்துவத்தால் அரை மணி நேரம் கழித்து நெஞ்சுவலி சற்றுக் குறைந்திருப்பதாகக் கூறினுர். பத்து மணிக்கு மருத்துவ உதவி ஊர்தி வந்தது. 10-30 மணிக்குத் தலைமை மருத்துவமனையில் பாவாணரைச் சேர்த்தோம்.

---

## 'மாடு' என்னுஞ் சொல்லுக்கு விளக்கம்

மாடு=செல்வம். இது ஒரு பழைய பொற் காசைக் குறித்த மாடை என்னும் சொல்லின் திரிபாகக் கருதப்படுகின்றது. மாழை=பொன், பொற்கட்டி. மாழை—மாடை—மாஷ (வட சொல்.)

பண்டைக் காலத்தில் உலகெங்கும் கால்நடையே செல்வமாகக் கருதப்பட்டதினுல், மாடு என்னும் விலங்குப்பெயரே செல்வம் என்னும் பொருளைத் தழுவிற்றென்று கொள்வதே மிகப் பொருத்தமாம். ஒப்பு நோக்க :

இலத்தீன் (L): Pecu (=cattle)—pecunia (=money)—

ஆங்கிலம் (E): pecuniary=consisting of money.

L. caput (=head)—capitalis—E. capital—cattle—chattel =movable possessions.

"கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை." (குறள். 400)

—மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்

*திருவள்ளுவர் நினைவு மலர், பக். 44*

# அறிவாற்றல் மிக்க அழகரடிகள்

[பேராசிரியர் நாரண துரைக்கண்ணன் ('ஜீவா')]

ஐம்பத்தாறு ஆண்டுகளுக்குமுன், அழகரடிகளை, நான் பள்ளியாசிரியர் பாலசுந்தரமாகப் பல்லவபுரத்தில் மறைமலையடிக ளாரின் இல்லத்தில் சந்தித்தேன்.

1924ஆம் ஆண்டு முதலில் அடிகளார் பேரன்புடன் என்னை ஆட்கொண்டார். இளமையிலேயே எனக்கிருந்த தாய்மொழிப் பற்றையும் இலக்கிய ஆர்வத்தையும் அறிந்து, என்னைத் தாமே வலிய அழைத்துச் சிலப்பதிகாரம் போன்ற தமிழ் இலக்கியங்களையும், சிவஞானபோதம் போன்ற சைவசித்தாந்த சாத்திரங்களையும் முறையாகப் பயிற்றுவித்து ஆளாக்கினர்.

மயிலாப்பூரிலிருந்து பல்லாவரத்துக்கு வாரந்தோறும் சென்று நான் அடிகளாரிடம் பாடங்கேட்டு வந்த சமயத்தில் ஒருவர் பின் னொருவராக வந்து உடன் படித்தவர்கள் சந்திரசேகர ஆசாரி எம்.ஏ., சோமசுந்தர முதலியார் பி.ஏ., பாலசுந்தரம்பிள்ளை முதலியோர்.

* * *

நாகை சி. கோபாலகிருஷ்ண பிள்ளை, சி. தண்டபாணிப் பிள்ளை, மணி திருநாவுக்கரசு முதலியார் போன்ற பழைய மாணவர் களோ, பின்னால் மாணவனான நானோ அடிகளாரிடம் சில ஆண்டுகள்தாம் பாடங் கேட்டிருப்போம்.

இளவழகனாரோ நெடுங்காலம் நிழல் போலிருந்து உற்ற பணியெல்லாம் புரிந்து அடிகளாரின் பெரும் புலமையை முழுதாகப் பயன்படுத்திக் கொண்டார்.

* * *

அழகரடிகள் கூர்த்த மதி படைத்தவர். படிக்கத்தக்க அறிவு நூல்களை ஆழ்ந்து படிப்பார்; கேட்கத்தக்க விழுப்பொருள்களை நுட்பமாகக் கேட்பார்; தாம் கற்றவைகளையும் கேட்டவைகளையும் பிறர்க்கு எடுத்துச் சொல்லி விளக்குவதில் ஆற்றல் மிக்கவர்.

சங்க இலக்கியங்களில் அழகரடிகட்கு இருந்த நல்ல பயிற்சியை, 'கலித்தொகை' முதலிய நூல்களுக்கு அவர் எழுதி யுள்ள தெளிவுரைகளே சான்று பகரும்.

அவர் சமய சாத்திரங்களிலும் நல்ல தேர்ச்சி பெற்றவர். சிவஞானபோதத்துக்கும் திருமந்திரத்துக்கும் அவர் கூறிவந்த விளக்கவுரைகளைக் கேட்டவர்கள் மறக்கவே முடியாது.

இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பாவுக்கு முதன் முதல் நல்லுரை கண்டவர் அழகரடிகள்தாம்.

* * *

'பத்துப்பாட்டு' என்னும் சங்க இலக்கியத்தில் 'சிறுபாண் ஆற்றுப்படை' என்ற நெடிய பாடலைப் பாடியிருப்பவர் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் என்ற பெரும் புலவர். இவர் எங்கள் செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள இடைக்கழி நாட்டில் தோன்றியவர் என்பதை, உலகுக்கு அறிவிக்க வேண்டி, சில ஆண்டுகளுக்குமுன் அழகரடிகள் மதுராந்தகம் சேயூரை அடுத்திருக்கும் பல கிராமங்கள் கொண்ட இடைக்கழி நாட்டில் ஓரிடத்தில் நத்தத்தனாருக்குச் சிலை எழுப்பிச் சிறு கோயில் ஒன்று கட்டி ஆண்டுதோறும் பெருவிழா நடத்தி வந்ததை அறிஞர்கள் அறிந்திருப்பர்.

* * *

அழகரடிகள் நூலறிவு மட்டுமன்று; உலகியல் அறிவும் நிரம்பப் பெற்றவர். கடமையுணர்ச்சி மிக்கவர். தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்பு எதையும் பொறுமையோடு நிறைவேற்றுவதில் கண்ணுங் கருத்துமாயிருப்பார்.

மறைமலையடிகளாரும் தமிழ்ப் பேராசிரியர் கா. நமசிவாய முதலியாரும் என்னைத் தமிழாசிரியனாக்கிவிட விரும்பினர். அந் நோக்கத்துடன்தான் அடிகளார் தம் மாப்பிள்ளையான திருவரங்கம் பிள்ளை திருநெல்வேலியில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்று ஓர் அமைப்பை நிறுவிச் சென்னை நகரிலும் அதற்கு ஒரு கிளையை ஏற்படுத்தியபோது, என்னைக் கழகப் புலவனாக இருக்குமாறு அவரிடம் அனுப்பி வைத்தார்.

அடிகளார் ஆணையை மீறத் துணிவின்றி நான் சில காலம் கழகத்தில் பணிபுரியலானேன். ஆனால், புதிய இலக்கியம் படைப்பதிலும் பத்திரிகாசிரியனாவதிலும் நாட்டம் கொண்டிருந்த எனக்கு இப் புலமைப் பணி பிடிக்கவில்லை. கழகப் புலவர் பதவியிலிருந்து விரைவில் விலகிக் கொண்டேன்.

எனக்குப் பின், அடிகளார் இளவழகனாரைக் கழகப் புலவராக இருக்குமாறு அனுப்பி வைத்தார். அவர் அப் பொறுப்பை ஏற்றுத்

தம் கடமையை ஒழுங்காகச் செய்து கழகப் பெரும்புலவர் என்ற பேரும் புகழும் பெற்ருர்.

*  *  *

என் உடன் படித்த தோழரொருவர் தம் அறிவாற்றலாலும் விடாமுயற்சியாலும் பெரும் புலவராகத் தம்மை உயர்த்திக் கொண்டு, சிறந்த உரையாசிரியராகவும், சமய தத்துவ விற்பன்ன ராகவும், நாநலம் படைத்த நல்ல பேச்சாளராகவும், தமிழ் அறிஞர் களிடையே தனிச் சிறப்புடன் திகழ்கிருர் என்ற பூரிப்பால்தான், நான் தலைவனுயிருந்த செங்கை தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில், 1964 ஆம் ஆண்டில் மதுராந்தகத்தில் பேரறிஞர் அண்ணு என்னுடன் இருந்து நடத்திக் கொடுத்த எழுத்தாளர் மாநாட்டில் அழகரடிகளுக்குக் கேடயமும் விருதும் வழங்கிப் பெருமைப் படுத்தினேன்.

*  *  *

அழகரடிகள் நூருண்டு காலம் வாழ்ந்திருக்க வேண்டிய வர்கள். இயற்கை அப் பெருமகனுடைய பருவுடலைக் கொண்டு போய்விட்டது ஆனுலும், அழகரடிகள் அருமையாகப் படைத்துத் தந்துள்ள அறிவு நூல்களும் மாம்பாக்கம் குருதலம் திருக்குறள் பீடமும் இருக்கும்வரை அவர்களின் நுண்ணுடல் இவ்வுலகில் நிலவியிருக்கும். அவர்களின் திருப் பெயர் நிலைத்திருக்கும்.

---

## ஒப்புரவு அறிதலும் ஈகையும்

'ஈகை' என்னும் அதிகாரத்தில் முதல் குறள் 'வறி யார்க்கு ஒன்று ஈவதே ஈகை' என்று கூறி அப்படி அதனைச் சிறப்பிப்பதற்குக் காரணம், "மற்றெல்லாம் குறி எதிர்ப்பை நீர துடைத்து" என்ற திருவள்ளுவர் எடுத் துக் காட்டுகிருர். ஒப்புரவு அறிதலைக் கடப்பாடாகக் கூறுகின்றவர், 'கைம்மாறு வேண்டா கடப்பாடு' என்று விளக்குகிருர். ஆதலின், ஒப்புரவு அல்லாத மற்றவையே குறி எதிர்ப்பை உடைய வென்பது தேறப்படும்.

அழகரடிகள்

(திருக்குறள் அறம், பக். ௪0௬)

# "நேர், நிரை, நேர்பு, நிரைபு, ஆகிய அசைகளின் அலகுகள்"

[சுந்தரசண்முகனர், புதுச்சேரி]

(பரல் எ, ௯களஆம் பக்கத் தொடர்ச்சி)

யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, வீரசோழியம், இலக்கண விளக்கம் முதலிய நூல்களின் ஆசிரியர்கள், நேர், நிரை என இரண்டே அசைகள் கொண்டனர்; இவர்களின் கருத்துப்படி நேர்பு அசையும் நிரைபு அசையும், ஈரசைகள் கொண்ட சீர்களாகும். காக்கை பாடினியாரும் இவ்வாறே ஈரசைகளாகக் கொண்டதாகவே இளம்பூரணர் கூறியுள்ளார். நேர், நிரை என்னும் ஈரசைகளே இக்காலத்தில் நடைமுறையில் உள்ளன. அலகிடுதல் என்ருல், சீர்களை அசை அசையாகப் பிரித்து வாய்பாடு கூறுதலே, என்னும் கருத்தே இன்று நிலவுகிறது. சீர்களை அசை அசையாக அலகிடுதல் உண்டே தவிர, அசைகளை எழுத்து எழுத்தாக அலகிடுதல் இல்லை. ஓர் எழுத்தே ஓர் அசையாக இருப்பதும் ஈண்டு நினைவுகூரத்தக்கது. அசைகளை எழுத்து எழுத்தாக அலகிடுதல் என்பது உண்மையாயின், 'நாடு' என்னும் நேர்பு அசை மூன்றலகும், 'உலகு' என்னும் நிரைபு அசை நான்கலகும் பெறுவது எப்படி? தொல்காப்பியரின் கருத்துப்படி, நேர்பு, நிரைபு என்பன தனித் தனிச் சீர்கள் அல்ல—தனித் தனி அசைகளே யாகும். இதனை உரையாசிரியர்கள் மூவரும் நன்கு வலியுறுத்தி உள்ளனர். அதனை இன்னும் விரிப்பிற் பெருகும்.

இன்னும் நமது வேலை முடியவில்லை. மாற்றுக் கொள்கையினர் வேருேர் ஐய வினவை ஈண்டு எழுப்பலாம். அது சரியான ஐய வினவே! அஃதாவது :—க, கல், கா, கால் என்பன போன்ற நால்வகை நேரசைகளும் ஒரோ ஓரலகு பெறும் என்று கூறப்பட்டது. இவற்றுள் 'க' என்பது போன்ற தனிக் குறிலின்பின் குற்றுகரமோ முற்றுகரமோ வரின், அது நிரையாகி விடுமாதலின், அதுபோக, குறில் கீழ் ஒற்ருகவும் தனி நெடிலாகவும் நெடில் கீழ் ஒற்ருகவும் உள்ள நேரசைகளின் பின்னே குற்றுகரமோ முற்றுகரமோ வந்து நேர்பு அசை உருவாகும்போதும், அந்த மூவகை நேர்பு அசைகளுங் கூட, ஒரோஓரலகுதானே பெறும்? அதேபோல,—குறிலிணையும் குறினெடிலுமாக உள்ள நிரை அசைகள் ஒருவகை அலகும், குறிலிணை ஒற்றும் குறினெடில் ஒற்று

மாக உள்ள நிரை அசைகள் மற்றொரு வகை அலகுமாக, நிரை அசை ஈரலகு பெறுமெனில், இவ்விரு வகையின் பின் குற்றுகரமோ முற்றுகரமோ வந்த நிரைபுஅசைகளுங்கூட இருவகை அலகுதானே பெறும்?—என்பது அவர்களின் ஐய வினாவாயிருக்கலாம். இதற்கு உரிய விடையாவது:—

இங்கே இடையில் ஒரு செய்தியை நினைவுபடுத்த வேண்டியுள்ளது. எழுத்துக்களுக்கு ஒலி வடிவம், வரி வடிவம் என இருவகை வடிவங்கள் உண்டு. ஒலி வடிவமே உண்மையான வடிவம்; வரி வடிவமோ, ஒலி வடிவத்தின் பதிவேயாகும். அஃதாவது:—ஒலி வடிவம் மாந்தரின் உண்மையான உருவம் போன்றது; வரி வடிவம் மாந்தரின் புகைப்படம் போன்றது. எனவே, மொழியிலக்கணம் என்பது பெரும்பாலும் ஒலி வடிவ அடிப்படையிலேயே இருக்கும். புணர்ச்சி விதிகளை எடுத்துக் கொள்ளின் இது நன்கு தெளிவாகும். ஒலி வடிவின் அடிப் படையில், தமிழில் உள்ளது போலவே, ஆங்கிலம், பிரெஞ்சு முதலிய மொழிகளிலும் ஒரு சார் புணர்ச்சி விதிகள் உண்டு. இதனை விரிப்பிற் பெருகும். எனவே, மொழியில் ஒலி வடிவமே மிகவும் இன்றியமையாதது. ஈண்டு, தொல்காப்பியம்—செய்யுளியலில் உள்ள

"அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தல் வல்லோர் ஆறே."

என்னும் (10ஆம்) நூற்பாவும், இலக்கண விளக்க நூலின் செய்யுளியலிலுள்ள

"அசைத்து இசை கோடலின், அசையே."

என்னும் (2ஆம்) நூற்பாப்பகுதியும் கவனிக்கத்தக்கன. இவற்றுள் காணப்படுகிற 'இசையொடு சேர்த்தல்' 'இசை கோடல்' என்பன, ஒலியை (ஓசையை) ஒட்டிய அமைப்புக்கு இன்றியமையாமை அளிப்பதைக் காணலாம். எனவே, மாற்றுக் கொள்கையினரின் ஐய வினாவிற்கு உரிய விடை, ஒலியின் அடிப்படையிலேயே இருக்கும். அது வருக:—

நேர் அசைக்கும் நேர்பு அசையில் உள்ள (நேர்—பு) 'நேர் என்னும் கூறுக்கும் ஒலி முயற்சியில் வேறுபாடு உண்டு: எ-டு:—'கல்' என்னும் தனிக்குறிற்கீழ் ஒற்று உள்ள நேர் அசைக்கும். 'கட்டு' என்னும் நேர்பு அசையில் உள்ள 'கட்' என்னும் நேர் அசைக் கூறுக்கும் வேறுபாடு உள்ளது. 'கல்'

என்பதிலுள்ள 'ல்' என்னும் ஒற்று மேலோடு ஒலிக்கப்படுகின்றது; 'கட்டு' என்பதில் உள்ள 'ட்', பக்கத்து எழுத்தோடு தொடர்பு கொள்வதற்காக அழுத்தம் பெற்று ஒலிக்கப்படுகிறது; ஒலித்து—ஒலித்து உண்மை காண்க.

'கா' என்னும் நேர் அசை எழுத்தும், 'காடு' என்னும் நேர்பு அசையில் உள்ள 'கா' என்னும் நேர் அசைக் கூறும் ஒலிப்பில் வேறுபடும். தனி நெடில் நேர் அசையாகிய 'கா' என்பது இயற்கையான அளவுடன் ஒலிக்கப்படுகிறது. 'காடு' என்பதில் உள்ள 'கா', பக்கத்து எழுத்தோடு தொடர்பு கொள்வதற்காக, இயற்கையினும் சிறிது நீட்டி ஒலிக்கப்படுகிறது. ஒலித்து—ஒலித்து உண்மை காண்க.

'கால்' என்னும் தனி நெடிற் கீழ் ஒற்று உள்ள நேர் அசையில் இருக்கும் 'ல்' என்னும் ஒற்றும், 'காட்டு' என்னும் நேர்பு அசையில் இருக்கும் 'கட்' என்னும் நேர் அசைக் கூறில் உள்ள 'ட்' என்னும் ஒற்றும் முன்னவை போலவே ஒலிப்பில் வேறுபடுவதை ஒலித்துக் காண்க. எனவே, நேர்பு அசை மூவகை அலகு பெறுவது காண்க.

நேர்—நேர்பு போலவே, நிரை அசைக்கும் நிரைபு அசையில் உள்ள (நிரை—பு) நிரை என்னும் கூறுக்கும் ஒலி முயற்சியில் வேறுபாடு உண்டு. மலடு, மலட்டு, மலாடு, மலாட்டு—என்பன நிரைபு அசையின் எடுத்துக்காட்டுகளாகும். குறிலிணையாகவும் குறினெடிலாகவும் உள்ள நிரை அசைகள் ஒருவகையான அலகு பெறும் என்று முன்னர்க் கூறப்பட்டுள்ளது. ஆயினும் 'மலடு' (மல—டு) என்னும் நிரைபு அசையில் உள்ள 'மல' என்னும் குறிலிணை நிரை அசைக் கூறும், 'மலாடு' (மலா—டு) என்னும் நிரைபு அசையில் உள்ள 'மலா' என்னும் குறினெடில் நிரை அசைக் கூறும் ஒலிப்பில் வேறுபடும். 'மலா' என்பதிலுள்ள 'லா' என்னும் நெடில், பக்கத்தில் உள்ள 'டு' என்னும் எழுத்தைத் தழுவுவதற்காக, இயற்கையான ஒலியைவிடச் சிறிது நீண்டு ஒலித்தலை அறியலாம். எனவே, மலடு என்னும் நிரைபு அசையும் மலாடு என்னும் நிரைபு அசையும் தம்முள் வேறுபட்டுத் தனித்தனி ஒலி அலகு பெற்றுள்ளமை புலப்படலாம்.

இவ்வாறே, 'மலட்டு' (மலட்—டு) என்னும் நிரைபு அசையில் உள்ள 'மலட்' என்னும் குறிலிணை யொற்றுகிய நிரை அசைக் கூறும், 'மலாட்டு' (மலாட்—டு) என்னும் நிரைபு அசையில் உள்ள 'மலாட்' என்னும் குறினெடில் ஒற்றுகிய நிரை அசைக் கூறும் மேற்கூறியவாறே ஒலிப்பில் வேறுபடுவதை அறியலாம். எனவே,

மலட்டு, மலாட்டு, என்னும் நிரைபு அசைகள் தம்முள் வேறு பட்டுத் தனித்தனி ஒலி அலகு பெற்றுள்ளமை புலப்படலாம். ஆகவே, மலடு, மலட்டு, மலாடு, மலாட்டு—என்னும் நிரைபு அசைகள் நான்கும் தனித்தனி ஒலிக் கூறு பெறுவதால், நிரைபு அசை நால்வகையான அலகு பெற்றுள்ளமை புலனாகலாம்.

ஈண்டு ஒரு சிலர் ஒன்று நினைக்கலாம்; அஃதாவது :— இளம்பூரணரின் நான்கலகுக் கொள்கையைச் சரிக்கட்டுவதற்காக, யான் வரிந்து கட்டிக்கொண்டு, நுட்பமான ஒலி வேற்றுமைகளைக் காட்டி வலிந்து முயல்வதாக ஒரு சிலர் நினைக்கலாம். நிலைமை அஃதன்று. தமிழ்மொழியில் நுட்பமான ஒலி வேற்றுமைகள் மிகவும் இன்றியமையாமை பெற்றுள்ளமையைத் தமிழ் இலக்கணம் கற்றோர் நன்கு அறிவர். தமிழ் எழுத்துக்களுள் ஒலி (மாத்திரை) குன்றாத எழுத்து 'இ' ஒன்றே ஒன்றாகும்; ஆனால் ஒலி குன்றிய 'இ' முப்பத்தேழாகும்; இது குற்றியலிகரம் எனப்படும். ஒலி குன்றாத 'உ' ஒன்றே; குன்றிய 'உ' முப்பத்தாறாகும்; இது குற்றியலுகரம்; ஒலி குன்றாத 'ஐ' ஒன்றே; குன்றிய 'ஐ' மூன்றாகும்; இது ஐகாரக் குறுக்கமாம். ஒலி குன்றாத 'ஔ' ஒன்று; குன்றிய 'ஔ' ஒன்று; இது ஔகாரக் குறுக்கம். ஒலி குன்றிய 'ம்' ஒன்று; குன்றாத 'ம்' மூன்றாகும்; இது மகரக் குறுக்கம். ஒலி குன்றாத 'ஃ' ஒன்று; குன்றிய 'ஃ' இரண்டாகும். இது ஆய்தக் குறுக்கம் ஆகும். இதனை நன்னூலின் எழுத்தியலில் உள்ள

"அஃகும் இ மூப்பான் ஏழ்,
உகரம் ஆறாறு, ஐகான் மூன்றே,
ஔகான் ஒன்றே, மஃகான் மூன்றே,
ஆய்தம் இரண்டோடே..."

என்னும் (6ஆம்) நூற்பாப் பகுதியால் அறியலாம். இந்த அமைப்பைக் கொண்டு, தமிழ் இலக்கணத்தில் ஒலி வேறுபாடு மிகவும் நுட்பமாகக் கணக்கிடப்பட்டுள்ளமை பெறப்படும். எனவே, யான், ஒலி வேற்றுமையைக் கொண்டு, இளம் பூரணரின் நான்கலகுக் கொள்கையைப் பொருத்திக்காட்ட முயல்வது இயல்பே. காக்கைபாடினியாரும் தொல்காப்பிய உரையாசிரியர்களும், நுட்பமான ஒலிக்கூறின் அடிப்படையிலேயே நிரை அசைக்கு 'இணை அசை' என்னும் பெயர் தந்துள்ளனர் என்பதும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது.

(தொடரும்)

# "தென்னக எல்லோரா"

[தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி. காம்., விசாரத்

*இணைப்பதிவாளர், தனி அதிகாரி, திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி (வரையறை) திருநெல்வேலி ]*

நீராரும் கடல் உடுத்த நிலமடந்தை தன் சிறு பிறைநுதல் எனப் போற்றப்படுவது தக்கணம். அங்கு மான்யகேடத்தைத் தலைநகராகக் கொண்டு கோலோச்சியவர்கள் ராட்டிரகூட மன்னர்கள். அவர்களில் 8 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆண்டவன் முதலாம் கிருட்டிணன் என்பான். அவன் எல்லோரா என்னும் இடத்தில் கைலாசநாதருக்கு மலையைக் குடைந்து கோயிலை உருவாக்கினான். கோவிலுக்குத் தேவையானவற்றை வெளியே இருந்து கொண்டுவரவில்லை. எடுத்துக்காட்டாக, தூண், கொடிமரம் ஆகியவை எங்கு இருக்கவேண்டும் என முன்கூட்டியே திட்டமிடப்பெற்றன. தேவையானவற்றைவிட்டு மற்றைய இடங்கள் குடைந்து எடுக்கப்பெற்றன. அதன்பின் தேவையானவை அதாவது தூண், சிலை ஆகியவை உருவாக்கப் பெற்றன. மலையைக் குடைந்து உருவாக்கிய குடைவரைக் கோயில் களின் முழு வளர்ச்சி இது. இதன் எழிலார்ந்த வடிவிலே தம்மை மறந்து பெர்சி பிரௌன், கேப்டன் சீலி, பெர்கூசன் போன்ற சிற்பக்கலை வல்லுநர்கள் புகழ்மாலைகள் அணிவித்துள்ளார்கள்.

இயற்கையாக அமைந்துள்ள மலைச்சரிவுகளில் குடைந்து, குடைந்து குடைவரைகள் உருவாக்கப்பெற்றன. அவை ஓர் இரண்டு மண்டபங்கள், ஓர் இரண்டு கருவறைகள் கொண்டனவாக இருந்தன. இத்தகைய குடைவரைகள் தமிழகம் எங்கும் பரந்து காணப்படுகின்றன. மேலும் மாமல்லபுரத்தில் சிறிய அளவிலான குன்றுகள் கோவில்களாகச் செதுக்கப்பெற்றன. அவற்றை பஞ்சபாண்டவர் தேர், பிடாரிகோயில் என்று கூறுவர். இவற்றி னின்றும் மாறுபட்டு, எல்லோராவில் ஒரு பெரிய மலை கோயிலாக உருவாக்கப்பெற்றது. அது கோபுரம், நந்திமண்டபம், விமானம், சுற்றுப்புறக் கோயில்கள், மண்டபம் ஆகியவற்றைக்கொண்டு உள்ளது. இந்தக் கோயில் 100 அடி உயரமும், 145 அடி நீளமும், 62 அடி அகலமும் உடையது. இத்தகைய அமைப்பு சிறிய அளவில்—நெல்லை மாவட்டத்தின் கழுகுமலையில் காணப்படுகிறது. ஒரு பெரிய மலையினின்றும் ஒரு பகுதியை வேறுபடுத்தி அதைக் கவின்மிக்க கோவிலாக அமைக்க முயற்சி செய்யப்பட்டுள்ளது. எனவே இது, "தென்னக எல்லோரா" எனப் போற்றப்பெறுகிறது.

இது இங்கு ''வெட்டுவான் கோயில்'' என்று அழைக்கப்பெறுகிறது. இங்குள்ள சிற்பங்கள் (உலகப் புகழ்பெற்ற) எல்லோராவில் உள்ளனவற்றைவிட நுணுக்கமாகச் செதுக்கப்பெற்றுள்ளனவாக திரு. பெர்கூசன் தமது ''இந்திய நாட்டுக் குடைவரைக் கோயில்கள்'' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

பாண்டியர்களின் மிகச்சிறந்த படைப்பாகக் கருதப்பெறும் வெட்டுவான் கோயில் முற்றுப்பெருமல் நின்றுவிட்டது. இது மாபெரும் இழப்பாகும். பல ஆண்டுகளுக்குமுன் தன் வீட்டை விட்டுப் புறப்பட்ட சிற்பி ஒருவன் இந்தக் கோயிலே உருவாக்கிக் கொண்டிருந்த தன் மகனே, மகனெனத் தெரியாது, பொருமையால் கொன்றுவிட்டானும். அதனுல்தான் இந்தக் கோயில் பாதியிலே நின்றுவிட்டது எனச் செவிவழிச் செய்தி ஒன்று இங்கு நிலவுகிறது. தனி ஒருவனுல் இந்தக் கோயில் உருவாக்கப்பெற்றதாகச் சொல்லப் படுவது சற்றும் பொருத்தமாகத் தெரியவில்லே. கோயிலின் உட்புறத்தில் பல விரிசல்கள் காணப்படுகின்றன. மேலே உள்ள உச்சி, முடி ஆகியவற்றின் சுமை தாங்காது விரிசல் கண்டிருக்கலாம். இந்நிலேயில் மேலும் பணிதொடர்வது வீண் எனக் கருதியிருக்க லாம். எனவே இந்தக் கோயில்பணியைப் பாதியிலேயே நிறுத்தி யிருக்க வேண்டும் எனக் கொள்வதே பொருத்தமாக உள்ளது.

தலேயின் உச்சியில் துளே ஒன்று காணப்படுகிறது. உச்சியிற் குடம் இருந்து உடைந்து உள்ளது. வட்ட வடிவங்கொண்ட உச்சி யின் மேல் தாமரை இதழ்கள் எட்டு காணப்படுகின்றன. இது கதிரவனேக்கண்ட தாமரை மலர்ந்ததுபோன்று உள்ளது. உச்சியில் எட்டுக் கூடுகளும், அவற்றிற்கு இடையே பூவும் காணப்படு கின்றன. கூடு பல்லவர்கால கூட்டின் அமைப்பினேக் கொண் டுள்ளது. சிலவற்றில் பூவேலேயும், மற்றவற்றில் சிங்கத்தின் தலேயும் உருவாக்கப்பட்டுள்ளன.

உச்சிக்குக் கீழே உள்ள பகுதி கிரீவம் எனப்படும். உச்சி யில் உள்ள 8 கூடுகளுக்கு அடியில் கிரீவத்தில் இரண்டு இரண்டு அரைத்தூண்கள் அமைக்கப்பெற்றுள்ளன. கிழக்கு,மேற்கு, வடக்கு, தெற்கு ஆகிய திசைகளில் உள்ள இரண்டு அரைத்தூண்களுக்கு இடையில் தெய்வ வடிவங்கள் உள்ளன. அரைத்தூண்களுக்கு இடையில் பூவேலே செதுக்கப்பட்டுள்ளது. கிரீவத்தின் நான்கு மூலேகளிலும் அண்ணலின் ஊர்தியாம் நந்தி மூலேக்கு இரண்டு இரண்டாக அமைந்துள்ளன. அவற்றின் முன்னங்கால் மடங்கி யுள்ளது. குளம்பு தெரிகிறது. பின்னங்கால் வழியே வால் இயற்கையாக வெளியே காணப்படுகிறது. நந்திகளின் கழுத்தில் மணி உள்ளது.

கிரீவத்தின் தென்புறப்புரையில் 4 கைகளுடன் ஆலமர் செல்வன் வடிக்கப்பட்டுள்ளான். தலையில் சடைமுடியும், பின் வலக்கையில் மழுவும் காணப்படுகின்றன. பின் இடக்கை சிதைந்து உள்ளது. வலக்காதில் குழை, இடக்காதில் தோடு, கழுத்தில் மாலை, தோள்களில் கேயூரம், கைகளில் கடகம், இடுப்பில் (உதர பந்தனம்), இடைக்கட்டு ஆகியவை அணியப்பட்டுள்ளன. முன் கைகள் இரண்டும் உடைந்து உள்ளன. இவற்றிற்கு இடையே மிருதங்கம் உள்ளது. வலக்கால் மடங்கி, இருக்கையின் மீதும், இடக்கால் தொங்கிய நிலையிலும் உள்ளன. அதாவது சுகாசனத்தில் வீற்றிருக்கிறார். இடக் காலுக்கு அடியில் கையில் பாம்புடன் முயலகன் காணப்படுகின்றான். ஆடையின் மடிப்பு தெளிவாகத் தெரிகிறது. மார்பு, வயிறு போன்ற உடல் அமைப்புகள் இயற்கையாக அமைந்துள்ளன.

முனிவர் உடனாய், அறநான்கு அருள்செய்த காதார் குழையான் யோகதட்சணாமூர்த்தி, ஞானதட்சணாமூர்த்தி, வியாக்யான தட்சணாமூர்த்தி, வீணாதர தட்சணாமூர்த்தி என ஆகம விதிகளின் படி அமைக்கப்பட்டான் என திரு. கோபிநாதராவ் தம் ''இந்து தெய்வ வடிவங்களின் அடிப்படைகள்'' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். ஆனால் இங்கு தட்சணாமூர்த்தி மிருதங்கத்துடன் செதுக்கப்பட்டுள்ளார். இது வேறு எங்கும் காண்டற்கரிய அருமையான படைப்பாகும்.

மேற்புறப்புரையில் நரசிம்மர் அமைக்கப்பட்டுள்ளார். பின் வலக்கையில் கத்திரி அத்தத்தில் சக்கரம் இருக்கிறது. அது நேராகப் பிடிக்கப்பட்டுள்ளது. பின் இடக்கையில் சங்கு உள்ளது. முன் இரு கைகளும் சிதைந்துவிட்டன. இடக் காலைத் தாமரைப் பீடத்தில் வைத்துள்ளார். மார்பில் முப்புரி நூல் காணப்படுகிறது.

வடபுறப்புரையில் நான்கு கைகளுடன் நான்முகன் தாமரைப் பீடத்தில் யோகாசனத்தில் அமர்ந்துள்ளார். பின்வலக்கையில் அக்கமாலையும், பின் இடக்கையில் மலரும், முன்வலக்கை சின்முத்திரையாகவும், முன் இடக்கை தொடைமீதும் உள்ளன. ஆரம், கேயூரம், கடகம் போன்ற அணிகலன்களை அணிந்துள்ளார். இரண்டு யானைகள் இவர் உட்கார்ந்திருக்கும் தாமரைப் பீடத்தின் கீழே காணப்படுகின்றன.

கீழ்ப்புறப்புரையில் உமையுடன்கூடிய மூர்த்தி காணப்படுகிறார். இறைவன் தலையில் சடைமுடி உள்ளது. நான்கு கைகளில் முன் இரண்டு கைகள் சிதைந்துவிட்டன. பின் இடக்கையில் மான் உள்ளது. பின் வலக்கையில் உள்ளது சரியாகத்தெரியவில்லை. அவர்

கால்மேல் கால்போட்டு உட்கார்ந்து உள்ளார். அன்னை பார்வதி இரண்டு கைகளுடன் வடிக்கப்பட்டுள்ளாள். இடக்கை இடத் தொடைமீது உள்ளது. வலக்கால் பீடத்தின்மீது படுக்கையாக உள்ளது. இடக்கால் குத்திட்டுப் பீடத்தின்மீது உள்ளது: அதாவது வீராசனத்தில் அமர்ந்துள்ளாள். அண்ணல் சாய்ந்த நிலையில் அம்மையைப் பார்த்த வண்ணம் உள்ளார். அன்னை அண்ணலை நேராக நோக்கியவாறு உள்ளாள்.

கிரீவம், மற்றும் முதல் தளத்திற்கு இடையில் கபோதம் உள்ளது. கபோதத்திற்கு மேலே யாளி வரிசையும், கீழே பூத கண வரிசையும் உள்ளன. கபோதத்தில் கந்தர்வர்கள் தலைகளுடன் பக்கத்திற்கு இரண்டாக எட்டுக் கூடுகள் உள்ளன. கூடுகளுக்கு இடையே பூவேலை உள்ளது. சில கூடுகளுக்கு நடுவில் இலிங்கமும் சிலவற்றில் கட்டிட அமைப்பும் காணப்படுகின்றன. கூடுகளுக்குக் கீழே கண்கவர் வனப்புவாய்ந்த தேவமகளிர் நளினத்துடன் வடிக்கப்பட்டுள்ளனர். கலைத்திண்மைக்கு இஃது ஓர் எடுத்துக் காட்டாம். கபோதத்தின் நான்கு மூலைகளில் யானைகளும், அவற்றின்வாய்களில் பூவேலையும் காணப்படுகின்றன.

முதல் தளத்தில் கீழ்ப்புறம் நீங்கலாக ஏனைய 3 பக்கங்களிலும் ஒவ்வொரு பக்கத்திலும் ஓரமாக சதுர அமைப்பினைக்கொண்ட கூடங்கள் உள்ளன. இவற்றிற்கு நடுவில் நீண்ட சதுரவடிவிலான சாலை காணப்படுகிறது. ஒவ்வொரு கூடத்திலும் ஒரு கூடு உள்ளது. கூடத்தை இரு சிங்கங்கள் தாங்கிக்கொண்டிருக் கின்றன. கூடத்திற்குக் கீழே இரு அரைத் தூண்களுக்கு இடையே பெண்ணொருத்தி அமைக்கப்பட்டுள்ளாள். சாலைக்கு இருபுறமும் கூடுகள் உள்ளன. அவற்றிற்கு அடியில் உள்ள அரைத் தூண் களுக்கு இடையில் தெய்வவடிவம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. சாலைக்கு முன்புறம் ஒருகூடு உள்ளது. இதை நான்கு பூதகணங்கள் தாங்கிக்கொண்டிருக்கின்றன. இவற்றிற்கு அடியில் உள்ள புரைகளில் தெற்கில் ஆலமர் செல்வனும், மேற்கில் திருமாலும், வடக்கில் சிவனும் உள்ளனர்.

கோயில்களில் பல்வேறு பகுதிகளுக்கு மனித உறுப்புக்களின் பெயர்கள் இடப்பட்டுள்ளன. சிகரம் என்பது தலை. அதை அடுத்து கிரீவம் அதாவது கழுத்துப்பகுதி. மனிதன் தன் கழுத் துக்குக் கீழே உள்ள மார்பில் மாலை அணிகிறான். மாலையில் எவ் வாறு பல்வேறு அமைப்புகள் தொடர்ந்து ஒரே மாதிரி காணப்படு கின்றனவோ, அதேபோன்று முதல் தளத்தில் கூடம், சாலை என்ற அமைப்புகள் தொடர்ந்து ஒரே மாதிரி உருவாக்கப்பட்டுள்ளதால் அது ஆரம் என்று குறிப்பிடப்படுகிறது.

தெற்கில் உள்ள ஆலமர்செல்வர் நான்கு கைகளுடன் சுகாசனத்தில் வடிக்கப்பட்டுள்ளார். தலையில் சடைமுடி உள்ளது. பின் வலக்கையில் மான் உள்ளது. முன் இடக்கை தொடைமீதுஉள்ளது. ஏனைய இரு கைகள் சிதைந்துவிட்டன. கடகம், கேயூரம் போன்ற அணிகலன்களை அணிந்துள்ளார். மார்பில் முப்புரி நூல் காணப்படுகிறது.

மேற்புறத்தில் நான்கு கைகளுடன் திருமால் உருவாக்கப்பட்டுள்ளார். தலையில் முடி உள்ளது. பின் வலக்கை கத்திரி அத்தத்தில் சக்ரத்தைப் பிடித்து உள்ளது. அது நேராக உள்ளது. பின் இடக்கையில் சங்கு உள்ளது. முன் வலக்கை சிதைந்துவிட்டது. முன் இடக்கை ஆசனத்தின்மீது உள்ளது. வீராசனத்தில் அமர்ந்துள்ளார். மாலை, கேயூரம் போன்ற அணிகலன்கள் அணிந்துள்ளார். இருபுறமும் இரு கைகளுடன் கதிரவனும், திங்களும் பிரபையுடன் காணப்படுகின்றனர்.

மேற்புறத்தில் சாலையின் மேல் இரண்டு தாமரைப் பீடங்கள் உடைந்து உள்ளன. மேலும் சாலையின் மேல் இருபுறமும் உள்ள பூக்களில் வலப்புறம் பெண்ணொருத்தியும், இடப்புறம் ஆண்மகன் ஒருவனும் அழகாகச் சாய்ந்த நிலையில் இடுப்புவரை உருவாக்கப்பட்டுள்ளனர். சாலைக்கு இருமருங்கும் உள்ள கூடுகளில் ஏனைய கூடுகளில் இருப்பதைப்போன்று சிங்கத்தின் தலை, மேல் பாகத்தில் உள்ளது. அத்துடன் உட்புறமாகவும் ஐந்து சிங்கங்களின் தலைகள் காணப்படுவது தனிச்சிறப்பாகும்.

வடபுறப்புரையில் நான்கு கைகளுடன் சிவன் அமைந்துள்ளார். தலையில் சடைமுடியுடன் பின் இடக்கையில் மான் உள்ளது. பின் வலக்கையில் உள்ளது தெரியவில்லை. முன் இடக்கை ஆசனத்தின் மீது உள்ளது. முன் வலக்கை தொடைமீது வைக்கப்பட்டுள்ளது. பாம்பு ஒன்றும் காணப்படுகிறது. வீராசனத்தில் அமர்ந்துள்ள அவர் கடகம், கேயூரம், ஆரம்போன்ற அணிகலன்களை அணிந்துள்ளார்.

சிவனுக்கு இடப்புறமாக முருகன் பிரம சாத்தா வடிவில் உருவாக்கப்பட்டுள்ளார். தலையில் கரந்த மகுடம் அணிந்துள்ளார். பின்வலக்கையில் வச்சிரப்படையும், பின் இடக்கையில் அக்கமாலையும் உள்ளன. முன் கைகள் இரண்டும் தொடை மீது உள்ளன. அவர் கடகம், கேயூரம், ஆரம், (உதரபந்தனம்) வயிற்றுக்கட்டு ஆகியவற்றை அணிந்துள்ளார்.

முதல் தளத்திற்குக் கீழே யாளிவரிசை அமைந்துள்ளது. அதற்குக் கீழே இரண்டாவது தளம் உள்ளது. அதில் கீழ்புறம்

நீங்கலாக ஏனைய மூன்று பக்கங்களிலும் பக்கத்திற்கு ஆருகக் கூடுகள் உருவாக்கப்பட்டுப் பாதியிலே நின்றுவிட்டன.

கருவறையின்உள்ளே தெய்வத்தின் திருவுரு ஏதும் இல்லை. கருவறையை யொட்டி அர்த்த மண்டபம் உள்ளது. அதன் முகப்பிலும், சுற்றிலும் பூத கணவரிசை முற்றுப்பெருமல் நின்று விட்டது.

''பல்லவர்களின் குடைவரைக்கோயில்கள்'' என்ற நூலில் திரு. கே. ஆர். சீனிவாசன் என்பார், 'குடைவரைகள் பொதுவாக சமணப் பள்ளிகள் இருந்த இடங்களில் அமைக்கப்பெற்றன; அதற்குக் காரணம் அவை பூசனைக்குரிய இடங்களாக இருந்தது தான்' என்று குறிப்பிட்டுள்ளார். வெட்டுவான் கோயிலுக்கு அருகிலுள்ள மலைச்சரிவில் சமணர்களின் சிற்பங்கள் செதுக்கப் பெற்றுள்ளன. இங்கு சமண சித்தாந்தம் போதிக்கப்பட்டுவந்தது. இங்குள்ள சிற்பங்கள் பாண்டியப்பேரரசன் நெடுஞ்சடையன் பராந்தகன் காலத்தவை எனக் கருதப்படுகின்றன. இவன் கி. பி. 765 முதல் 792 வரை கோலோச்சியவன். ''கொன்னவில்கூர் வேற்கோன் நெடுமாறன்'' எனப் புதுவை மன்னன் பெரியாழ் வாரால் குறிப்பிடப்பெற்றவன். இவன் முதலாம் பாண்டியப் பேரரசைச் சார்ந்தவன். முதலாம் பாண்டியப் பேரரசு 9ஆம் நூற்ருண்டு வரை சிறப்போடு இருந்தது. எனவே வெட்டுவான் கோயிலை 9ஆம் நூற்ருண்டைச் சார்ந்ததாகக் கருதலாம்.



## சைவ சமயத்தின் தனிச் சிறப்பு

'சைவ சமயம்' என்பது இவ்விந்திய நாடு எங்கும் உள்ள தமிழ் நன்மக்களால் எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னேதொட்டுக் கைக்கொள்ளப்பட்ட கடவுட் கொள்கை யாகும். அஃது அவர்களை அறிவிலும் உருக்கத்திலும் ஒழுக் கத்திலும் மேலேறச்செய்து, மற்றை நாட்டவர்க்கு இல்லாத் தனிப்பெருஞ் சிறப்பினை அவர்கட்கே தந்து, மற்றைச் சமயங் களுக்கெல்லாம் மேலான தனி நிலையில் வைகி விளங்குவது.

—மறைமலையடிகள்

மறைமலையடிகளார் உரைமணிக்கோவை, பக். 168.

# "தமிழ் நூலகம் ஆகிவிட்டாய்"

[பேராசிரியர்: இரா. மதிவாணன்]

1. செங்கதிர் போல்மொழி ஞாயிறு உன்கதிர்
எங்கட்கு ஒளிதந்தது—பகைக்
கங்குலும் போதந்தது
மங்காத மாத்தமிழ் முன்னோர் பிறந்தகம்
குமரிநா டெனநாட்டினாய்—தமிழ்க்
குமரிக்கு முடிசூட்டினாய்
அங்க ணுலகத்துத் தாய்மொழி தமிழென
வரையறை செய்துவிட்டாய்—வெறும்
புரைமைகள் போக்கிவிட்டாய்
பொங்கொளிர் அறிவே பூந்தமிழ் நிலவே
எங்ஙனம் நான்மறப்பேன்—இனி
யாரைத் தலைமைகொள்வேன்?

2. ஆயிரம் நக்கீரர் ஒருரு வாய்வந்த
அருந்தமிழ்ப் பாவலன்நீ—தமிழ்ப்
பெருமைக்குக் காவலன்நீ
தாயகந் தமிழ்பேசிச் செந்தமிழ்ச் சூழ்வென்ற
தென்னவர் பிறங்கடைநீ—எம்
முன்னவர் அறக்கொடைநீ
ஆயிரங் கோடிகள் அடுக்கிக் கொடுப்பினும்
கொள்கை விடாமறவோய்—பகைக்
கொல்லரி மாதிறலோய்!
வியாப் புகழ்கொண்டு வாட்டும் துயர்தந்தாய்
எப்படி ஆற்றிடுவேன்—இனி
யாரைநான் போற்றிடுவேன்?

3. ஊறும் புனலென வீறும் கருத்துகள்
ஈர்த்தன அன்பர்களை—உடல்
வேர்த்தனர் வீணரெலாம்
சீறிடும் வேங்கை போலொரு தோற்றம்
சிரித்திடின் தென்றல்தான்—சுவை
விருந்திடு குறிஞ்சித்தேன்
மாறிடும் உலகில் மாறு மொழிநூல்
உண்மைகள் எனக்குரைத்தாய்—பணி
எண்ணி முடித்திடென்றாய்
நூறுண் டாயினும் வாழ்வேன் என்றாய்
காலன் தலையிட்டான்—தமிழ்
வேலி சிதைத்திட்டான்.

4. நோய்வாய்ப் பட்டதைக் கேட்ட முதலமைச்சர்!
நேரினில் ஓடிவந்தார்—வின்
ஊர்தியில் போமெனவே

ஆயும் மருத்துவர் இருவரை மதுரை
தேடி யனுப்பிவைத்தார்—பல்
கோடி மதிப்புவைத்தார்
தோயும் அன்பினில் தென்மொழி உதவ
சொற்பிறப் புருப்பெற்றது—வளர்
நற்பெயர் நிலைபெற்றது
தேயம் பலவினும் பாவாணர் மன்றம்
என்னென்ன வாய்த்ததையா—இனி
யார்க்கிவை வாய்க்குமையா ?

5. பச்சைக் குழந்தைபோல் பேசிச் சிரித்திடும்
இன்முகம் காண்பதென்ரோ—உயர்
பொன்மொழி கேட்பதென்ரோ !
நச்சிப் பிறமொழி தமிழிற் கலப்பாரை
நகையாடல் செவியினிக்கும்—ஏறு
நடையுமென் கண்ணினிக்கும்
உச்சிப்போ தானாலும் உண்ணா துழைக்கின்ற
ஊக்கத்தை யார்க்குரைப்பேன்—தமிழ்
ஆக்கத்தை என்னுரைப்பேன் ?
மெச்சிடும் நூல்வாங்கி மீறும் வறுமையிலும்
நூலகம் செய்தமைத்தாய்—தமிழ்
நூலகம் ஆகிவிட்டாய்.

---

## கலைகளில் வாழும் நுண்கலைச் செல்வர்

[புலவர் பொன். முனியப்பன், கூவலூர்.]

1. இராகவப்பேர் அடைந்தெங்கள் எழிற்பாண்டித் தலைநகரில்
இராவற்ற பொழுதினிலே, இனியகவின் கலைகளினை
இராவுள்ளம் கொண்டவரும் ஏற்கும்வண்ணம் உரைக்கையிலே
இராமலவர் உயிர்கலையில் இணைந்ததுவே! இணைந்ததுவே!

2. திருவிளக்கும் தாமரையும் திகழ்காசுச் செல்வமும்தொல்
பெருங்கடலில் தமிழராஅல் பிறங்கியபல் கலங்களையும்
அருங்கலைசூர் பொருள்களையும் ஆதித்த நல்லூரின்
பொருநைவெளி நாகரிகப் பொலிவினையும் காட்டுவித்தாய் !

3. அழகமைந்த பலகலைகள் அருந்தமிழர் அறிந்தாய்ந்து
பழகுதமிழ்க் கனிமொழியில் பகர்ந்துவைத்த பாங்கையெல்லாம்
கழகத்தின் வழியாயும் கருத்துடையோர் பணியாலும்
வழங்கியநுண் கலைச்செல்வ! வாழ்கின்ருய் கலைகளிலே!

4. வரலாற்றைத் தெளிந்துணர்ந்த வல்லுநராய்த் திகழ்ந்தோங்கி
அரவென்னும் கொடியவரால் அமிழ்த்தப்பட்ட உண்மைகளைக்
கரவின்றி வெளியிட்ட கடனறிநுண் கலைச்செல்வ!
பரவியுமை வழுத்துகின்ரேம் பயன்களினை விளைப்பதற்கே.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## கழக மணிவிழா அமைப்புக் கூட்டம்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தொடங்கி 1980ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களோடு 60 ஆண்டுகள் நிறைவுற்றதை முன்னிட்டு இவ்வாண்டில் கழக மணி விழாவினை, நடத்துவதென முடிவு செய்து, அதுபற்றிய அமைப்புக் கூட்டம் 29–3–81 அன்று, மறைமலையடிகள் நூல்நிலையக் கட்டிடத்தில் நடைபெற்றது. கூட்டத்திற்குக் கீழ்க் காணும் பெருமக்கள் வந்திருந்தனர் :

1. புலவர் மா. நன்னன்
2. சிறுவை மோகனசுந்தரம்
3. சிவ. சிவராமலிங்கம்
4. இரா. சுந்தரம் பிள்ளை
5. அன்புப் பழம்நீ
6. டாக்டர். சி. பாலசுப்பிரமணியன்
7. T. N. வள்ளிநாயகம்
8. மா. சு. சம்பந்தன்

அக்கூட்டத்தில் மேற்காணும் முடிவுகள் எடுக்கப்பெற்றன :

1. மணிவிழா வெளியீடாகத் திருவிளையாடற் புராணச் சொற்பொழிவுகளை நூலாக வெளியிட்டு விழா நடத்துதல்.
2. புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் எழுதிய கழக ஆட்சியாளர் அவர்களின் வரலாற்றினை நூல்வடிவில் வெளியிடுதல்.
3. அறுபது ஆண்டுகளில் தமிழ் வளர்ச்சி, தமிழ் இலக்கிய வளர்ச்சி, தமிழ் இதழ்களின் வளர்ச்சி, தமிழ் எழுத்து—அச்சு வளர்ச்சி, தமிழ் நூல் விற்பனை ஆகிய பொருள்களைப் பற்றிய செய்திகளடங்கிய விழா மலர் வெளியிடுதல்.
4. பதிப்புத் துறை பற்றிய கருத்தரங்கினை நடத்துதல்.

## குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி 13வது ஆண்டு விழா

5-4-81 அன்று, நெல்லைக் குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளியின் 13வது ஆண்டு நிறைவுவிழா உயர்திரு தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. திருவாட்டி தளவாய் சிவஞான வடிவு இராமசாமி அவர்கள் மாணவ மாணவிகட்குப் பரிசுகளை வழங்கினர். இவ்விழாவினையொட்டி இசையரங்கு, ஓரங்க நாடகம், கதம்ப நிகழ்ச்சிகள் ஆகியனவும் நடைபெற்றன. கழகத்தின் அறநிலையங்களுள் ஒன்றாக இயங்கிவரும் இப்பள்ளியின் வளர்ச்சிக்குப் பெருமக்கள் மேலும் தமது ஆதரவினை நல்குவார்களென எதிர்பார்க்கிறோம்.

## முப்பெரும் புலவர் விழா

தெ. இ. தமிழ்ச் சங்கத்தின் சார்பில் 23-3-81 அன்று, நெல்லையில், சங்கக் கட்டிடத்தில் இசைமணி கா. சங்கரனார் அவர்கள் தலைமையில், கழகப் புலவர்கள் தேவநேயப் பாவாணர், அழகரடிகள், அ. இராகவன் ஆகியோரின் மறைவு குறித்து இரங்கற் கூட்டமும் படத் திறப்பும் நடைபெற்றன. நெல்லை க. சுப்பிரமணியம், புலவர் சுப்பையா பாரதி, தி. க. மணி ஆகிய அறிஞர்கள் உரையாற்றினர்.

## சென்னைச் சிவனடியார் திருக்கூட்டம்

அழகரடிகளாரின் தொண்டுகளைப் பாராட்டுதற்கென 15-8-81இல், சென்னை, தங்கசாலை தொண்டை மண்டலம் மேல்நிலைப் பள்ளியில்

சிவனடியார் திருக்கூட்டச்சார்பில் கூட்டமொன்று நடைபெற்றது. கூட்டத்தினை திரு. மா. ரா. சம்பந்தம் அவர்கள் தொடங்கி வைக்கத் த. கி. நாராயணசாமி அவர்கள் தலைமை தாங்கினர். திருமதி சகுந்தலா அம்மையார், புலவர், சொ. ர. தேமொழியார், மறைமலையடிகள் நூலகத் தின் நூலகர் திரு. இரா, முத்துக் குமார சாமி, எம். ஏ., பி. லிப். திரு. சிறுவை மோகன சுந்தரம், அன்புப் பழம் நீ ஆகியோர் பாராட்டுரை வழங்கினர்.

## வ. வே சு. ஐயர் நூற்றுண்டு நிறைவு விழா

வ. வே. சு. ஐயர் அவர்களின் நூற்றுண்டு நிறைவு விழா தமிழ் நாடு அரசின் சார்பில் 5-4-81 அன்று சென்னைக் கலைவாணர் அரங்கில் சிறப்பாக நடைபெற்றது. மேதகு ஆளுநர் சாதிக் அலி அவர்கள் விழாத் தொடக்கவுரை ஆற்றினர். மாண்புமிகு அமைச்சர் க. இராசா ராம் அவர்கள் தலைமையில் கருத்தரங்கு நடைபெற்றது. அறிஞர் பலர் உரையாற்றினர். மாண்புமிகு முதல்வர் ம. கோ. இராமச் சந்திரன் அவர்கள் வ. வே. சு. ஐயர் அவர்களின் படத்தைத் திறந்து வைத்து நிறைவுரை ஆற்றினர். அவர்தம் உரையில், "வ. வே. சு. ஐயர் அவர்களால் எழுதப் பெற்று அச்சிடப் பெருமல் இருக்கும் நூல்களைத் தமிழ் நாடு அரசு வெளியிடும்" என்று கூறினர்.

## திரு. என். சி. நாயுடு அவர்கட்குப் பாராட்டு விழா

பாவலர் மன்றத்தின் சார்பில் 25-3-81 அன்று மாலை சென்னை எழும்பூர் பொருட்காட்சிச் சாலையின்கண் அமைந்துள்ள கலை அரங்கில் (மியூசியம் தியேட்டர்) நெட்டால் தமிழ் வைதீக சபையின் சார்பில் ஏழு நூல்களை வெளியிட்டுள்ள திரு என். சி. நாயுடு அவர்களையும், அந்நூல் கட்கு விளக்கவுரை எழுதிய வித்துவான் கே. எம். வெங்கட்ராமையா அவர்களையும் பாராட்டு முகத்தான் ஒரு கூட்டம் நடைபெற்றது. உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதி மாண்புமிகு பு. ரா. கோகுலகிருட்டிணன் அவர்கள் தலைமை தாங்கினர். மாண்புமிகு நீதிபதிகள் எஸ். நடராசன் அவர்களும், எஸ். மோகன் அவர்களும் நூல்களை வெளியிட்டனர். தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் அவர்களும், சென்னை 'ஷெரிப்' திரு. P. M. ரெக்ஸ் அவர்களும் வாழ்த்துரை வழங்கினர். சட்டப் பேரவைத் தலைவர் மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் திரு. கே. எம். வெங்கட் ராமையா அவர்கட்குப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தார், மாண்பு மிகு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் திரு. என. சி. நாயுடு அவர்கட்குப் பொன்னுடை போர்த்திச் சிறப்புரை ஆற்றினர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு, ௫௰-௩௩௰ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | மு. சுவாமிநாதன், சென்னை. | 5—00 |

# மதிப்புரை

## திருப்புகழ் (Selections from the Thiruppugazh)

தொகுப்பாசிரியர்கள்: N. C. நாயுடு (தென்னாப்பிரிக்கா) K. M. வெங்கட்ராமையா, எம். ஏ., நெட்டால் தமிழ் வைதிக சபை வெளியீடு. (12, Carlisole St. Durban, NATAL. S. Africa)

தேவாரம், திருவாசகம், திருவருட்பா ஆகிய பத்திப் பாடல்களினின்று அரிய பாடல்களைத் தொகுத்து அயல் நாட்டில் வாழும் சிறுவர்களுக்கு ஆங்கிலத்தின் துணையோடு கற்பிக்கும் ஓர் அரிய சமயப் பணியைத் தென்னாப்பிரிக்காவிலுள்ள நெட்டால் வைதிக சபை செய்து வருகிறது. திரு. N. C. நாயுடு அவர்கள் முன்னின்று இந்த அரிய பணியைக் கடந்த சில ஆண்டுகளாகச் செய்து வருகிறார்கள். இப் பத்திப் பாடல்களை ஆங்கில உச்சரிப்பின் உதவியோடும் பாடல்களை இயற்றிய சமய குரவர்களின் வரலாறுகளைப் படங்களோடும் விளக்கியும், பள்ளிச் சிறார்க்குச் சமய அறிவூட்ட இப்படியொரு புது முறையைக் கையாண்டு வருகிறார்கள். அவ்வகையில் முன்னரே நால்வர் வரலாறுகள் வெளிவந்துள்ளன. இப்போது அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பாடல்கள் சிலவற்றின் தொகுப்பு வெளிவந்துள்ளது. இதில் அருணகிரிநாதரின் வரலாறும் படங்கள் வாயிலாக விளக்கப் பெறுகின்றது. திருப்புகழ்ப் பாடல்கள் ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளியிடப் பெற்றுள்ளன. ஆங்கில ஆக்கத்தினை (Transliteration) திரு. K. M. வெங்கட்ராமையா அவர்கள் செய்துள்ளார்கள். திரு. N. C. நாயுடு அவர்களின் இத்தகைய பணி பெரிதும் பாராட்டத் தக்கது. அவரது முயற்சி வெல்க.

## எழுத்தும் அச்சும்

*[ஆசிரியர்: மா. சு. சம்பந்தன், தமிழர் பதிப்பகம், 243 லிங்கி செட்டித் தெரு. சென்னை 1, விலை: ரூ 5 - 00]*

இந்நாளில் நூல்களும், இதழ்களும் அழகிய முறையில் வெளிவருகின்றன. நாமும் மிக எளிதாக அவற்றால் பயன் பெறுகிறோம். ஆனால் அப்படி நாம் படித்து மகிழ அச்செழுத்துக்களும், பதிப்பு முறைகளும் எப்படியெப்படியெலாம் தோன்றி வளர்ந்து இன்றுள்ள நிலைக்கு வந்துள்ளன என்பதை அறியும்போது மிக வியப்பாக இருக்கும். 'எழுத்தும் அச்சும்' என்னும் இச் சிறு வெளியீடு அந்தச் செய்திகளை விவரமாகக் கூறுகிறது. அறிவியல் வளர்ச்சியில் நாட்டமுள்ளவர்கள் படித்தறிந்து கொள்ள வேண்டிய நூல்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

# THE MUTHIALPET BENEFIT FUND LTD.

VARADARAJULU BUILDING

(Estd : 1895) — (Phone : 20338 & 20339)

**New No. 199, Thambu Chetty Street, : : MADRAS-600001.**

**Office Hours: 8-30 to 12-00 Noon & 2 to 5 p.m.**

*On Sundays 8-30 a.m. to 12-30 p.m.*

WEEKLY HOLIDAY FRIDAY & OTHER PUBLIC HOLIDAYS

Increased rates of interest allowed on FIXED DEPOSITS with effect from 1—9—1980.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **3 Months** | 7½% | **1 Year** | 9½% | **3 Years** | 11% |
| **6 Months** | 8% | **2 Years** | 10% | **5 Years** | 12% |

**7 Years and above** 13%

½% Extra Interest on a Single Deposit of Rs. 10,000/- and above.

¾% Extra Interest on a Single Deposit of Rs. 25,000/– and above.

1% Extra Interest on a Single Deposit of Rs. 50,000/– and above.

½% Extra Interest on Deposit of Minors.

Further 1% Interest allowed for Educational, Religious and Charitable Institutions.

Minimum amount acceptable Rs. 100/-

INTEREST PAYABLE ON THE 1st OF EVERY MONTH.

The Existing Deposits will also get the Benefit of the enhanced rates from 1—9—1980 till the date of the Maturity.

On standing instructions Interest remitted to parties or to their Bankers direct every month

On SAVINGS DEPOSITS 6% withdrawal by Cheques

## ALSO ACCEPTS RECURRING DEPOSITS:

*Amount receivable at the end of each period for accounts opened from* **1-1-1981**

| Monthly Deposits | 12 months | 24 months | 36 months | 48 months | 60 months | 72 months | 84 months |
|---|---|---|---|---|---|---|---|
| Rs. | Rs. | Rs. | Rs. | Rs. | Rs. | Rs. | Rs. |
| 5 | 64 00 | 137 50 | 219 00 | 310 00 | 412 50 | 525 00 | 650 00 |
| 10 | 128 00 | 275 00 | 438 00 | 620 00 | 825 00 | 1,050 00 | 1,300 00 |
| 25 | 320 00 | 687 50 | 1,095 00 | 1,550 00 | 2,062 50 | 2,625 00 | 3,250 00 |
| 50 | 640 00 | 1,375 00 | 2,190 00 | 3,100 00 | 4,125 00 | 5,250 00 | 6,500 00 |
| 100 | 1,280 00 | 2,750 00 | 4,380 00 | 6,200 00 | 8,250 00 | 10,500 00 | 13,000 00 |
| 200 | 2,560 00 | 5,500 00 | 8,760 00 | 12,400 00 | 16,500 00 | 21,000 00 | 26,000 00 |
| 300 | 3,840 00 | 8,250 00 | 13,140 00 | 18,600 00 | 24,750 00 | 31,500 00 | 39,000 00 |
| 400 | 5,120 00 | 11,000 00 | 17,520 00 | 24,800 00 | 33,000 00 | 42,000 00 | 52,000 00 |
| 500 | 6,400 00 | 13,750 00 | 21,900 00 | 31,000 00 | 41,250 00 | 52,500 00 | 65,500 00 |

**Rs. 5/- and multiples received**

*LOANS:* *Rates of Interest charged.*

On Gold Jewels 16 1/5%

On House Properties Within Madras City with Recurring deposit system...15%

ON DEPOSITS :

Fixed Deposits 2% Over and above the rate on Fixed deposits;

Recurring Deposits 10½% & 15%

**B. Parandhama Naidu, B.Sc.,**
*President.*

**P. Bhoopathi, B Com.**
*Secretary.*

அப்பர் அச்சகம், சென்னை-1.